## இளமையின் எழில் ததும்பும் வதனம் பூவிலும் மென்மையான சருமம் பெறுங்கள்!

**...அதற்கு உங்கள் சருமத்தின் இயற்கையான ஈரத் தன்மை மாருமல் பாதுகாப்பது அவசியம்**

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமிலுள்ள பிரத்தியேகக் கலவை 'ஹ்யுமெக்டன்ட்' சருமத்தின் இயற்கையான ஈரத்தை உலராமல் காக்கிறது. இதனல் பருவகால மாறுதல்களாலோ, தூசு முதலியவற்றுலோ, சருமம் வறட்சியடையாமல் மிருதுவாக இருக்கிறது. துல்லிய வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் வதனத்திற்கு இளமை எழிலேயும், மென்மை சோபையையும் அளிக்கும்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாகப் பூசிக் கொண்டாலே உங்கள் முகம் பொலிவுடன் விளங்கும். அல்லது முகத்தில் முதலில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தடவி அதன் மேல் பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து முகம் மாசு மறுவில்லாமல் திகழும்!




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்—உலகத்து அழகிகளின் வதனத்தில் மிளிர்வது**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பட்டது)

P-1990

# கல்கி பொருளடக்கம்

கீலக வருஷம் மாசி 12உ. ★ 1969 பிப்ரவரி 23


| | | | |
|---|---|---|---|
| இடைத் தேர்தல் முடிவுகள் | தலையங்கம் | — | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | ... | — | 7 |
| மக்களின் அண்ணா! | என். வி. நடராசன் | — | 9 |
| ஆட்டுக்கு அருளிய ஆண்டி | ரா. கணபதி | — | 12 |
| கல்லூரியில் கலைவிழா | கோமதி சுவாமிநாதன் | — | 14 |
| பொன்னியின் செல்வன் | அமரர் கல்கி | — | 16 |
| மகாபாரதம் | ராஜாஜி | — | 30 |
| இதோ ஒரு துணை! | எஸ். வி. ஆர். | — | 34 |
| வழக்கும் வாதமும் | அம்பி ஆசிர்வாதம் | — | 36 |
| 007 பாலு | குமரன் | — | 38 |
| சிறுவர் விருந்து | வாண்டு மாமா | — | 43 |
| கிளிஞ்சல் கோபுரம் | ஜெகசிற்பியன் | — | 45 |
| வேள்வி | தபஸ்வி | — | 55 |
| குழந்தைகள் சொன்ன தாத்தா கதை | பாணன் | — | 61 |
| மணங்கள் | கோமகன் | — | 62 |
| இரத்த பாசம் | தகழி சிவசங்கரப் பிள்ளை-கே. நாராயணன் | — | 72 |








வீனஸ் ஸ்ரீ எஸ். ஜி. ரத்னம் அய்யர் அவர்கள் புதல்வி சௌ. திருபுரசுந்தரி, B. Sc.க்கும், திருச்சி டுடோரியல் கல்லூரி பிரின்சிபால் ஸ்ரீ பி. என். ராமன் அவர்கள் புதல்வன் பி. ஆர். சந்தானம், M. Com.க்கும் சென்னை வீனஸ் காலனியில் சமீபத்தில் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்


லைசன்ஸ் ஹோல்டர்கள்
காங்கிரஸ்


போ!
தமிழ்நாட்டு அரசாங்கம்
மது
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 30



# இடைத் தேர்தல் முடிவுகள்

**கா**ங்கிரஸ் மக்களின் நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டது என்ற பொதுவான உணர்ச்சியை இடைத் தேர்தல் முடிவுகள் நன்கு உறுதிப் படுத்தி விட்டன. நான்கு ராஜ்யங்களில் நடைபெற்ற தேர்தல்களிலிருந்து தெளிவாவது யாதெனில், மக்களின் உணர்ச்சிக்கு எதிராகப் போர் புரியும் மத்திய சர்க்கார் தோல்விமுகம் கண்டு வருவதேயாகும்.

சர்க்கார் ஸ்திரமாக இருக்கவேண்டும் என்ற ஒரே வாதத்தை வைத்துத் தில்லியில் காங்கிரஸின் ஆட்சியைப் பலப்படுத்த முயல்வது ஜனநாயக விரோதமானது. அரசாங்க இயந்திரத்தைக் கைவசமாக்கிக் கொண்டுள்ள காங்கிரஸ் கட்சி, பெர்மிட் - லைசென்ஸ் முறை மூலம் தேசத்தின் தொழிலதிபர்களையெல்லாம் சட்ட விரோதமாகத் தன் பிடிப்பில் வைத்துக் கொண்டிருப்பதைக் கருத்தில் கொண்டோமாயின், 'ஸ்திரத்தன்மை' என்னும் வாதம் சிறிதும் செல்லுபடியாகாது.

ஜவாஹர்லால் நேரு அவர்களின் சாட்சாத் புத்திரிதான் சிம்மாதனத்தில் வீற்றிருக்கிறார். சிம்மாதனத்தை விடாமல் இருப்பதில் தம் திறனை நிரூபித்தும் வருகிறார். எனினும் காங்கிரஸைச் சுற்றி ஜோதிப்பிரபை சூழ்ந்திருந்ததாக மக்கள் கொண்டிருந்த பிரமை மங்கத் தொடங்கி விட்டது. எத்தனை தேர்தல்களுக்கு வேண்டுமாயினும் செலவழிப்பதற்கு நிதி சேகரித்துக் கொள்ள வசதியாகத் தொழிலதிபர்களைத் தன் பிடியில் வைத்துக் கொண்டிருப்பதாலேயே காங்கிரஸ் காலம் தள்ள முடிகிறது. பொருளாதார சர்வாதீனம் என்கிற ஒரே கயிற்றைப் பற்றிக் கொண்டு காங்கிரஸ் விழாமலிருக்கிறது.

மக்களுக்குக் காங்கிரஸிடம் நம்பிக்கை இல்லை என்ற எதிர்மறை விஷயம் ஒரு புறம் இருக்க, மறுபுறம் 'ஸ்தூலமாக' என்ன நடந்திருக்கிறது எனப் பார்ப்போம். பல்வேறுவகை அரசியல்வாதிகள் சுய முன்னேற்றமே குறியாக இருக்கின்றனர்; தேச நலனுக்கு எது தேவை என்ற நோக்கத்துக்காக அரசியல்வாதிகள் ஒன்று சேரக்காணோம். எந்தத் தலைவரைப் பின்பற்றினால் சுய முன்னேற்றத்துக்கு உதவும் என்று பார்த்துக் கோஷ்டி விசுவாசங்களை வளர்த்துக் கொள்கின்றனர். இதுவே 'ஸ்தூலமாக' நாம் காண்பது.

இத்தகைய நிலையிலிருந்து விமோசனம் கிடைப்பது ஈசுவர அனுக்கிரகத்தினால் தான் முடியும். அதற்குப் பிரார்த்திப்போம். 'அரசியல்வாதிகள் தங்களது தனி முன்னேற்றத்தை நினைக்காமல் தேசநலனை மனமார உணர வேண்டும். அடுத்த தலைமுறைக்கு ஒரு நல்ல அரசாங்கத்தை பாரம்பரியச் சொத்தாக விட்டுச் செல்வதே நம் கடமை என்பதை இன்றுள்ள தலைவர்கள் உணர வேண்டும். மக்களின் சுதந்திரத்தைக் கட்டிப் போடாத சர்க்கார் வேண்டும். தொழில்திறன் சுதந்திரமாகத் தன் கால்களின்மீதே நின்று வளர வேண்டும். ஆட்சியிலுள்ளோர் எதேச்சாதிகார எண்ணங்களுக்குச் சற்றும் இடம் தராதிருக்க வேண்டும். நாச வேலைகளைக் கண்டிப்புடன் அடக்க வேண்டும். இப்படிப் பட்ட நிலை ஏற்பட அருள்புரிவாய்' என்று ஆண்டவனிடம் முறையிடுவோம்.

சர்க்கார் சர்வாதிபத்திய முறை கம்யூனிஸ சித்தாந்தத்துக்கு ஒப்பானதே. அது பலனளிக்கவில்லை என்பதும் நிரூபணமாகிவிட்டது. எனவே இம்முறையின் உருவமாகவுள்ள காங்கிரஸை எதிர்த்தே ஆக வேண்டும். காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்க விரும்புவோர், சர்க்காரின் அதிகாரத்தைக் குறைப்பதையே முக்கியமாகக் கொள்ள வேண்டும். அப்போதுதான் காங்கிரஸை எதிர்ப்பதில் பொருள் உண்டு. சர்க்கார் அதிகாரத்தைக் குறைப்பதே காங்கிரஸ் எதிர்ப்பின் முதுகெலும்பு.

# என்ன சேதி?

## அகாதமி பரிசு

பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்களுக்குச் சாகித்திய அகாதமியின் பரிசு இவ்வாண்டு கிடைத்திருப்பதையறிந்து தமிழ் கூறும் நல்லுலகமெங்கிலுமுள்ள அன்பர்கள் பெருமகிழ்ச்சி யடைவார்கள். பேராசிரியர் அ. சீ. ரா., 'நாணல்' என்ற புனைபெயரில் மறைந்து கொண்டு பல அரிய கருத்துக்கள் கொண்ட கவிதைகள் புனைந்து வந்திருக்கிறார். அவருடைய ''வெள்ளைப் பறவை'' என்ற கவிதைத் தொகுப்புக்கே இவ்வாண்டு சாகித்திய அகாதமியின் பரிசு கிடைத்துள்ளது.

பேராசிரியர் அ. சீ. ரா. தொழில் முறையில் ஆங்கிலப் பேராசிரியர்; வ. உ. சி. கல்லூரியின் முதல்வர். பல பேராசிரியர்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றவர்.

ஆனால் அவர் உள்ளத்தால் தமிழ்க் காதலர்; பக்தர். தமிழ் ஆர்வமும் இலக்கியப் பசியும் கொண்டு நாற்பதாண்டுகாலமாக, டி. கே. சி. முன்னோடியாக நின்று காட்டிய இலக்கிய விமரிசனப் பாதையில் செல்பவர். வைணவப் பிரபந்தங்களையும், கம்பரையும் வள்ளுவரையும் லட்சோப லட்சம் தமிழ் மக்களுக்கு ஊட்டி அவர்களின் இலக்கிய ரசனையை வளர்த்த பெருமை அ. சீ. ரா.வினுடையது. அவர் செய்துள்ள இம்மகத்தான சேவைக்கு எப்பரிசு கொடுத்தாலும் காணாது.

## இலக்கியச் செல்வர் ராஜாஜி

இவ்வருடம் சாகித்ய அகாதமியின் கௌரவ அங்கத்தினராகும் சிறப்பினைப் பெற்ற நால்வரில் ஒருவர் ராஜாஜி. கௌரவத்துக்கே இலக்கியமாக விளங்கும் ராஜாஜி, தமது இலக்கியத் திறனால், அகாதமியின் கௌரவ அங்கத்தினராகி அந்த ஸ்தாபனத்துக்கே மாபெரும் கௌரவம் தந்துவிட்டார்.

''தேச பக்தர், ராஜநீதி நிபுணர், மனிதாபிமானி, தர்மவீரர், இலக்கிய கர்த்தர், இன்றைய மொழியில் பண்டைய இலக்கியச் செல்வங்களைப் பரப்பியவர் — இப்படிப் பலதரப்பட்ட உன்னதத்துக்காக'' ராஜாஜி இந்தக் கௌரவத்தைப் பெறுகிறார் என்று அகாதமியின் அறிக்கை கூறுகிறது.

அட்சர லட்சம் பெறுகிற வார்த்தைகள்!

## வெள்ளி விழா!

கரூர் நாரத கான சபாவின் வெள்ளி விழாவை பிப்ரவரி 16ந் தேதி தொடங்கி இருபத்தைந்து நாட்களுக்குத் தொடர்ந்து சிறப்பாக நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள்.

விழா, முன்னாளில் இந்தியாவின் தூதராக மாஸ்கோவிலிருந்த திரு கே. பி. எஸ். மேனன் ஐ. ஸி. எஸ். தலைமையில் நடக்கவிருக்கிறது. கோவை ஸ்ரீமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு வெள்ளிவிழா உரை நிகழ்த்துகிறார்.

பல வைபவங்களும், சங்கீத நாடக நிகழ்ச்சிகளும் சேர்ந்து கரூர்வாசிகளை இருபத்தைந்து நாட்களுக்கு ஒரே ஆனந்த வெள்ளத்தில் மிதக்கவிடப் போகிறது! இந்தப் பொன்னான நேரத்தில் நாரத கான சபையின் ஜீவநாடியெனத் திகழ்ந்து அதன் வளர்ச்சிக்கு அரும்பாடு பட்டு வரும் கரூர் வழக்கறிஞரும் சபையின் காரியதரிசியுமான திரு என். வேதாந்தாச்சாரி அவர்களை இசைக் கலைஞர்களும் ரசிகப் பெருமக்களும் நிச்சயம் மனமாரப் பாராட்டுவார்கள்.

---

### மகாத்மாவின் மணிமொழி

'முனிவர்' என்பது மிகப் புனிதமான பதம். ஒருவரைக் குறித்து இவ்வார்த்தையைச் சர்வ சாதாரணமாக உபயோகிக்கக் கூடாது. குறிப்பாக, என் விஷயத்தில் 'முனிவர்' என்ற வார்த்தையை உபயோகிக்கக் கூடாது. நான் சத்தியத்தை விநயத்துடன் தேடிக் கொண்டிருக்கின்ற ஒருவன். அவ்வளவே. என் குறைபாடுகளை அறிந்திருக்கிறேன். நான் தவறுகள் செய்கிறேன். ஆனால் தவற்றைப் பகிரங்கமாகக் கூறிக் கொள்ள நான் தயங்குவதில்லை. வாழ்க்கையின் நிரந்தர சத்தியங்களில் சிலவற்றைக் குறித்து விஞ்ஞானி போல் சோதனை செய்கிறேன். ஆனால் விஞ்ஞானி என்றும் நான் உரிமை பாராட்டுவதற்கில்லை. ஏனெனில், நவீன விஞ்ஞானத்தில் உள்ளது போல் என் சாதனங்களை அப்பழுக்கில்லாதவை என்று பிரத்தியட்ச நிரூபணம் காட்ட முடியவில்லை. என் பரிசோதனையின் விளைவுகளையும் விஞ்ஞானி போல் ஸ்தூலமாகக் காட்ட முடியவில்லை.

எந்த விதத்திலும் நான் என்னை ஒரு முனிவராகக் கருதவில்லை. செய்ய வேண்டியவற்றைச் செய்யாதிருத்தல், செய்யக் கூடாததைச் செய்தல் ஆகிய தவறுகளை என்னை அறியாமல் செய்கிறேன். இருப்பினும் என்னைச் சத்தியத்தின் பக்தனாகக் கருதிக் கொள்கிறேன்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

அண்ணாதுரை அவர்களின் மறைவு குறித்துச் சென்னையில் பிப்ரவரி 8ந் தேதி யன்று ஷெரீப் நடத்திய கூட்டத்தில் நான் கூறியதாவது :

''பிரிவினையாகாத சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக நான் இருந்த போது அண்ணாதுரை இருபத்தியேழு வயது நிரம்பிய ஒரு கருகருப்பான இளைஞராக இருந்தார். கடவுளையும் மதத்தையும் ஆட்சேபித்து வந்தார். பிரிட்டிஷ் ஆட்சியை விடச் சிறப்பான சர்க்கார் இந்தியாவுக்கு இருக்க முடியாது என்பது அப்போது அவரது கருத்து. ஆனால் ஆண்டுகள் செல்லச் செல்ல அண்ணாவின் அறிவு முதிர்ச்சி பெற்று, விவேகம் வாய்ந்தவராகவும், பண்புடன் கூடியவராகவும், பிற கருத்துக்களைக் கவனத்துடன் பார்ப்பவராகவும் வளர்ந்து, மக்களின் தலைவர் ஆனார். அவரிடம் நான் கொண்ட அன்பு வளர்ந்தது. அவரும் இதைப் பிரதிபலித்து நடந்து கொண்டார்.

''கிழவனின் அன்பு பிருவானது. அது இளைஞர்களின் உணர்ச்சி மிகுந்த அன்பு போன்றதல்ல. இன்று உங்களைப் போலவே நானும் துக்கிக்கிறேன். உங்களுடைய துயரம் கண்ணீராக உருகி வெளிவந்து, உங்கள் சுமையைக் குறைக்கிறது. என் துயரமோ உறைந்து போய், வேதனை செய்கிறது.

''இந்தியாவின் முக்கியஸ்தர்கள் யாவரும் அண்ணாவுக்குச் சூட்டிய புகழுரைகள், அருமையான வலக் கரத்தை இழந்துவிட்ட தமிழ் மக்களுக்கும் சூட்டிய புகழுரையாகும். நம் துயரத்தைப் போக்குவதற்காக இங்கு வந்துள்ள அனைவருக்கும் நாம் நன்றி தெரிவிக்கிறோம்.

''தமிழகத்தின் தலைவருடைய மரணத்தின் மீது, டில்லிக்கும் சென்னைக்கும் இடையே மனப்பூர்வமான உறவு வளர்ந்துள்ளது. இதை ஒரு நிரந்தர அம்சமாக்குவதற்காக மத்திய சர்க்கார் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக் கூடாது என்பதை நான் ஒரே வார்த்தையில் சொல்ல முடியும். ஆனால் அதைச் சொல்வதற்குரிய சந்தர்ப்பம் இதுவல்ல.''

மத்திய சர்க்கார் செய்ய வேண்டியது என்ன, செய்யக் கூடாதது என்ன என்று இப்போது இந்தப் பத்திரிகையில் கூறுகிறேன் : ஆங்கிலம்தான் தொடர்பு மொழியாகவும், அகில இந்திய ஆட்சி மொழியாகவும் இருக்கும் என்று உடனடியாக, சந்தேகமறப் பிரகடனம் செய்ய வேண்டும். இதைச் செய்தால் டில்லிக்கும் தமிழ் நாட்டுக்குமிடையே சாசுவதமாகவும், முடிவாகவும் முறிக்க முடியாத மனப்பூர்வமான உறவு ஸ்திரமாகும். இது தேசத்துக்கே ஒரு பெரும் பலமாக இருக்கும். ஹிந்தியை ஆதரித்து ஆங்கிலத்தின் ஸ்தானத்தை இறக்குவதால் இதைக் காட்டிலும் பெரிய லாபம் பெற முடியுமா ? முடியாது என்றே கருதுகிறேன்.

டில்லி சர்க்கார் இவ்வுறவை வலியுறுத்த வேண்டுமாயின் செய்யக் கூடாதது இது தான் : தி. மு. க. ஆட்சியின் பிரதிக்ஞை பூண்ட எதிரியை மத்திய சர்க்காரின் அதிகார ஸ்தானத்தில் அமர்த்தி, நல்லுறவுப் பணியைப் பிளக்கும் ஆப்புக் கட்டையைச் சிருஷ்டித்துவிடக் கூடாது.

விஷயங்களை நான் சுருக்கமாகவும், அப்பட்டமாகவும் சொல்லி விட்டேன். 'ஆனால்' 'இனால்' போட்டு யோசனைகளை நீர்க்கச் செய்து விடாமல், திட்டவட்டமான ஆலோசனை பெற்றால்தான் தேசிய லட்சியங்களைச் சிறப்பாக அடையலாம்; ஆபத்துக்களையும் தவிர்க்கலாம்.

ஃஃஃ

'கரை போட்ட வேஷ்டிகள், வர்ணச் சேலைகள், அச்சிட்ட சேலைகள் ஆகியவற்றை ஆலைகள் உற்பத்தி செய்யக் கூடாது என்று மத்திய சர்க்கார் தடை விதிக்க வேண்டும்; இவ்வினங்களை லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்களுக்கெனவே ஒதுக்கிவிட வேண்டும்' என்று பதினேழாண்டுகளுக்கு முன்பு நான் சென்னை சட்டசபையின் ஏகமனதான முடிவைப் பெற்றேன். இக்குடிசைத் தொழிலைச் சார்ந்திருக்கும் ஏராளமான மக்களால் சர்க்காருக்குப் பாரம் இல்லை. ஒரு நூற்றாண்டுக் காலமாக இக்குடிசைத் தொழிலானது ஆலைகளின் தாக்குதலைச் சமாளித்துள்ளது. இன்றளவும் மக்கள் கைத்தறித் துணிகளை விரும்புகின்றனர்.

இத்தனை ஆண்டுகளுக்குப்பின் இப்போதேனும் மத்திய சர்க்கார் இவ்விஷயமாகச் சிந்திப்பது கண்டு மகிழ்கிறேன். சென்னை சட்டசபையின் பழைய தீர்மானத்தைச் செயலுருவாக்குவதில் முதல் அடி எடுத்து வைப்பதற்கு மத்திய சர்க்கார் முடிவு செய்திருப்பதாகத் தோன்றுகிறது. கைத்தறிக்குத் தேவைப்படும் காப்பைத் தர அரசாங்கம் முடிவு செய்திருப்பின், அதை வெறும் வார்த்தையால் மட்டுமின்றிக் காரியத்திலும் பூரணமாகச் செய்து காட்ட வேண்டும். அச்சிட்ட புடவைகளையும், கரை போட்ட புடவைகளையும், வண்ணப் புடவைகளையும், கரை போட்ட வேஷ்டிகளையும் கைத்தறிக்கு என்றே ஒதுக்க வேண்டும். பத்திரிகையில் அரசாங்க உத்தரவைப் பார்க்கும்போது அது இவ் விஷயத்தில் அரைகுறை மனத்துடன் ஈடுபடுவதுபோல் தோன்றுகிறது.

ஃஃஃ

வாக்காளர்கள் சாவடிக்குப் போகாமல், தங்கள் வீட்டு வாசலிலேயே வோட்டுப் போட வகை செய்வதற்கு ஒரு திட்டம் வகுக்க வேண்டும் என்ற விருப்பத்தை இத்தனை காலத்துக்குப்பின் இப்போதேனும் தேர்தல் கமிஷன் வெளியிட்டுள்ளது கண்டு மகிழ்கிறேன். கடந்த பல வருஷங்களாக இதற்காகவே நான் பலமாகக் குரல் எழுப்பி வந்திருக்கிறேன். இதில் ஏற்படக்கூடிய சிரமங்களையும், இதை எதிர்த்து எழும்பும் ஆட்சேபணைகளையும் கண்டு திட்டத்தைக் கைவிட மாட்டார்கள் என நம்புகிறேன். இந்தியாவில் ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காக, இந்தத் திட்டம் முறைப்படி வகுக்கப்படும் என்று நம்புகிறேன்.



# மக்களின் அண்ணா!

## என். வி. நடராசன் எம். எல். ஸி.

(அமைப்புச் செயலாளர், தி. மு. க.)

தமிழகத்தின் ஒளிவிளக்கு அணைந்துவிட்டது. தவழ்ந்து வந்த பொதிகைத் தென்றல் நின்று விட்டது !

வழிகாட்டி, ஒளி காட்டிய அந்த மக்கள் தலைவர் விழி மூடி உறங்கி விட்டார்.

நினைக்கவே நெஞ்சு நடுங்குகிறது. நம்பவே முடியவில்லை !

யாருக்கும் கிடைக்காத தலைவன் நமக்குக் கிடைத்து விட்டான் என்று தலைநிமிர்ந்து நடந்த தமிழ் மக்கள் இன்று திசை தடுமாறி நிற்கின்றனர்.

சாய்ந்து கிடந்த அந்தச் சரித்திரத் தலைவனைக் கண்டு தலையில் அடித்துக் கொண்டு தேம்பி அழுதோர் பலர்! மூர்ச்சையானவர் ஏராளம்! அவர் காலடியில் விழுந்து, ''நீங்கள் சென்ற இடத்துக்கு நானும் வருகிறேன்'' என்று புலம்பினோர் பலர்.

உலக வரலாற்றில் எந்தத் தலைவனுக்கும் கிடைக்காத மக்களின் பாசம் — அண்ணாவுக்குக் கிடைத்தது.

அண்ணா, மக்களிடையே நெருங்கிப் பழகி, மக்களின் முன்னேற்றத்துக்காகவே பணியாற்றிய மாபெரும் தலைவர்! அந்த அறிஞர் பெருந்தகையைத் தமிழக மக்கள் நாட்டுத் தலைவராக மட்டும் கருதவில்லை; தங்கள் வீட்டுத் தலைவராகவும் போற்றி வந்தனர். ஆதலால்தான் தமிழகத்தில் இன்று ஒவ்வோர் இல்லமும் இருள் சூழ்ந்து காணப்படுகிறது.

பேரறிஞர் அண்ணா அவர்கள் அவ்வப்போது நினைவூட்டும் வாக்கியம், அடிமைத் தளையறுத்த ஆபிரகாம் லிங்கனின் கருத்துக்களாகும்.

''மக்களுக்காக — மக்களால் ஆளப்படும் மக்களுடைய அரசைக் காண்பதுதான் எனது இலட்சியம்'' என்று முழங்கி வந்தார் அண்ணா. அது போலவே மக்கள் அரசை உருவாக்கினார். உருவாக்கியது மட்டுமல்ல, அந்த மக்கள் அரசை நடத்தியும் காட்டினார். நல்லரசாகவும் விளங்கச் செய்தார்.



''மக்கள் குரலே மகேசன் குரல்!'' என்று முழங்கினார் அண்ணா.

கழகத்தின் — கழக அரசின் எந்தப் பணியும் ஏழை, நடுத்தர மக்கள் ஏற்றம் காணக் கூடியதாய் அமையப் பெற வேண்டும் என்பதில் இறுதி வரை உறுதியாக விளங்கினார்.

திராவிடர் கழகத்தில் இருந்து பணியாற்றியபோது, தந்தை பெரியார் அவர்கள் ஈரோடிலிருந்து சென்னைக்கு வந்து போவது ரயிலில்தான். பெரியார் அவர்கள் சென்னைக்கு வரும்போதும், ஈரோடுக்குத் திரும்பிச் செல்லும்போதும் ரயிலடிக்கு அண்ணா அவர்களும் அவருடன் நானும் மற்ற நண்பர்களும் செல்லுவோம். பெரியார் அவர்கள் கொண்டு செல்லும் பெட்டி படுக்கை உள்ளிட்ட சாமான்களை நாங்கள் ஆளுக்கொன்றாக எடுத்து வருவோம். ரயில் நிலையத்திலுள்ள போர்ட்டர் தோழர்கள் ஓடோடி வரு

படவிளக்கம்: 1951ல் சென்னையில் நடைபெற்ற தி. மு. க. முதல் மாநில மகாநாட்டில் மகாநாட்டுத் தலைவர் அண்ணாவுக்கு வரவேற்புத் தலைவர் திரு என். வி. என். மாலை அணிவிக்கிறார்.

வார்கள், சாமான்களை எடுத்துச் செல்ல. நாங்கள் எடுத்துச் செல்வதைக் கண்டு ஏமாற்றத்துடன் திரும்பிச் செல்வார்கள். பெரியார் அவர்களோ எட்டு அணா மிச்சம் என்று மகிழ்ச்சியடையவார். ஆனால் அண்ணா அவர்கள் மகிழ்ச்சியடைந்தாரில்லை என்பது சில நாட்கள் சென்று தெரிய வந்தது.

ஒரு சமயம் அண்ணா அவர்கள் எங்களிடம் சொன்னார்: ''நாமெல்லாம் மூட்டை சுமந்தால் 'போர்ட்டர்'ருக்கு ஒரு ரூபாய் கிடைக்கலாம். (இது 1940ஆம் ஆண்டில்) அந்தப் பிழைப்பையும் நாம் கெடுக்க வேண்டுமா? ஓரளவு வசதி படைத்த அய்யா அவர்கள் எட்டு அணா கொடுப்பதால் என்ன நட்டம் வந்துவிடும்? வசதியில்லாதவர்கள் அவரவர்களே தங்களின் மூட்டை முடிச்சுக்களைச் சுமந்துதான் செல்ல வேண்டும். அய்யாவுக்குத் தொண்டு செய்வதாய் எண்ணி ஏழை போர்ட்டர்களின் பிழைப்பை இனிமேல் கெடுக்காதீர்கள்!''

அதிலிருந்து நாங்கள் பெரியார் அவர்களை அழைத்து வரச் செல்லும் போது போர்ட்டரிடமே படுக்கை – பெட்டி முதலியவைகளைக் கொடுத்து எடுத்து வரச் சொல்லுவோம்.

அப்போதெல்லாம் அண்ணா காஞ்சியிலிருந்து சென்னைக்குப் பஸ்ஸில்தான் வந்து போவார். பிராட்வே பஸ் நிலையத்திலிருந்து கருப்பண்ணன் வீதிக்கு (இராணி அண்ணியின் பாட்டி இல்லம்) நடந்தே வருவார். அப்படி வரும்போது ஏழை எளிய மக்களின் வாழ்க்கை நிலையைக் கண்டு அதைப் பற்றியே எங்களுடன் பேசி வருவார். அவரது பொது வாழ்வின் துவக்கக் கட்டத்திலிருந்தே ஏழை மக்கள் வாழ்க்கையின் அவல நிலையை எண்ணி எண்ணி அவற்றைக் களைந்தெறியாமல் சமுதாயம் ஒழுங்குறாது என்ற உறுதிப்பாட்டினை உள்ளத்தில் பதிய வைத்து வந்தார்.

அன்றைய ஜஸ்டிஸ் கட்சி மக்களின் கட்சியாக மலரத் தீவிர முயற்சி எடுத்துக் கொண்டவர் அண்ணா.

1939ஆம் ஆண்டு பிரிட்டிஷ் ஆட்சியினருக்கும் காங்கிரசுக்கும் வேறுபாடுகள் வளர்ந்து அதன் எதிரொலியாக மாநிலங்களில் ஆட்சி புரிந்து வந்த காங்கிரஸ் அரசாங்கங்கள் உடன் கலைக்கப்பட வேண்டும் என்று காங்கிரஸ் மேலிடம் உத்தரவு பிறப்பித்தது. அதற்கேற்ப சென்னை ராஜ்யத்திலும் ராஜாஜி சர்க்கார் பதவியைத் துறந்தது. உடன் அன்றிருந்த ஆங்கிலேய கவர்னர் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்களை அழைத்துச் சர்க்காரை அமைக்குமாறு கேட்டுக் கொண்டார். கட்சியின் நிர்வாகக் குழுவைக் கலந்து முடிவெடுப்பதாகத் தெரிவிக்கப்பட்டது.

அன்று கட்சியின் தலைவர் பெரியார் அவர்கள். பொதுச் செயலாளர் அறிஞர் அண்ணா. சர் பன்னீர்செல்வம், இராமச்சந்திர ரெட்டியார், சர் பாத்ரோ, சவுந்திர பாண்டியனார், ராசா சர் முத்தைய செட்டியார் போன்றவர்களும் கட்சியின் மற்ற பொறுப்புக்களை நிர்வகித்து வந்தார்கள். நானும் நிர்வாகக் குழுவில் உறுப்பினனாக இருந்தேன்.

கவர்னரின் வேண்டுகோளை ஏற்று அரசை அமைக்க வேண்டும் என்பது ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்கள் பலரது திட்டவட்டமான எண்ணம். ஆனால் அண்ணா அவர்களோ பதவி ஏற்கக் கூடாது என்பதில் மிகவும் உறுதியாக இருந்தார். எனினும், என்னைப் போன்ற சிலரது ஆதரவுதான் அண்ணாவின் கருத்துக்கு இருந்தது. அண்ணாவின் கொள்கை எப்படி நிறைவேறப் போகிறது என்று எங்களுக்குப் புரியவேயில்லை.

இறுதியாக அண்ணா அவர்கள் அந்த நிர்வாகக் குழுக் கூட்டத்தில் ஆற்றிய உணர்ச்சி மிக்க பேச்சு, பெருந்தலைவர்களின் மயக்கத்தைத் தெளிய வைத்தது. பிரிட்டிஷ் ஆட்சியின் தூதுவராக உள்ள கவர்னரின் வேண்டுகோளை ஜஸ்டிஸ் கட்சி ஏற்கவில்லை.

பிரிட்டிஷ் ஆட்சியின் பிடிப்பு இந்திய நாட்டிலிருந்து அகற்றப்பட வேண்டும் என்பதை உலகுக்கு அறிவிக்கும் வகையில் ஜஸ்டிஸ் கட்சி பதவி ஏற்கவில்லை என்று கவர்னருக்கு அறிவிக்கப்பட்டது.

இதன் வாயிலாக ஜஸ்டிஸ் கட்சியின் வரலாற்றில் ஈடுஇணையற்ற அத்தியாயம் அமையப் பெற்றது. ஜஸ்டிஸ் கட்சி உண்மையான தேசிய இயக்கம் என்று அன்றைய அரசியல் உலகம் விமர்சித்தது.

அது மட்டுமல்ல, பிரிட்டிஷார் வழங்கிய பட்டங்களைத் துறக்க வேண்டும் என்றும், அப்படித் துறக்க முடியாதவர்கள் கட்சியிலிருந்து வெளியேற வேண்டும் என்றும் ஒரு தீர்மானத்தை ஜஸ்டிஸ் கட்சி மாநாட்டில் நிறைவேற்றி அக்கட்சியினை மக்களின் இயக்கமாக மாற்றிய தனிப் பெருமை அறிஞர் அண்ணா அவர்களையே சாரும்.

அண்ணா அவர்கள் சுற்றுப்பயணம் மேற்கொள்ளும்போது, கிராமப் பகுதிகளில் எங்காவது ''தெருக் கூத்து'' நடந்தால் உடனே காரை நிறுத்தி எங்களையும் அழைத்துக் கொண்டு தொலைவில் நின்று தெருக் கூத்தை ரசிப்பார். மக்கள் ரசிப்பதைக் கண்டு தாமும் மகிழ்வார்.

1947ஆம் ஆண்டு இந்தியா விடுதலை பெற்ற போது, பெரியார் அந்நாளைத் துக்க நாள் என்று அறிவித்து நாடெங்கும் கழகத்தினர் துக்க நாள் கூட்டம் நடத்த வேண்டும் என்றார். ஆனால் அண்ணா அவர்கள் அந்நிய ஏகாதிபத்தியம் நாட்டை விட்டு வெளியேறுவதை வரவேற்பதாக – பூரிப்படைவதாக அறிக்கை விடுத்தார்.

''ஒரு நாட்டின் வரலாற்றில் அரசியல் நிர்ணய சபை கூடுவது, எழுச்சிக்குரிய சம்பவம். விடுதலை பெற்றுவிட்டோம் என்று மக்கள் மகிழ வேண்டிய நேரம். மலடியோ என்று சந்தேகிக்கப்பட்ட தாய்க்குப் பிறந்த குழந்தை 'அம்மா' என்று அழைக்கும் போது, அந்தத் தாய்க்கு உண்டாகும் களிப்புக்குச் சமமானது, ஒன்றரை நூற்றாண்டு அடிமைத் தனத்திலிருந்து நாடு விடுதலை பெற்றதற்கு எடுத்துக்காட்டாக அரசியல் நிர்ணய சபை கூடுவது''

என்று முழக்கமிட்டு அண்ணா அவர்கள் சுதந்திர தினத்தை வரவேற்றார். இவ்வாறு தலை நிமிர்ந்து எழுப்பிய முழக்கத்தின் மூலம்

தாம் அப்பழுக்கற்ற உண்மையான தேசியவாதி என்பதையும் மக்களின் எழுச்சியை முழு அளவு உணர்ந்த தலைவன் என்பதையும் அரசியல் விவேகம் படைத்த அனைவரும் உணரும்படி அன்றே செய்து விட்டார்.

அரசாங்கத்தை எதிர்த்துக் கழக சார்பில் நடத்தப்பட்ட ஒவ்வோர் அறப் போராட்டத்தையும் கட்சியின் மேல் மட்டத்திலுள்ள ஒரு சிலர் மட்டுமே ஈடுபடக் கூடியதாய் அல்லாமல், கழகத்தில் ஈடுபாடு கொண்டுள்ள அனைவருமே ஆற்றக்கூடிய வகையில் திட்டத்தைத் தீட்டுவார் அண்ணா. அதாவது, வாழ்க்கையின் கீழ் மட்டத்திலுள்ள மக்களும் போராட்டத்தில் பங்கு பெற்றால்தான் கொள்கையும் பரவும், அக்கொள்கை மக்களின் கொள்கையாகவும் மலரும் — வளரும் என்பது அண்ணாவின் திடமான எண்ணம்.

திராவிட நாடு விடுதலைக் கொள்கையைத் திருத்த வேண்டிய நிலை ஏற்பட்ட போதுகூட கழக முன்னணியிலிருந்த தலைவர்களின் நிலையைக் காட்டிலும், கழகத்தில் சேர்ந்துள்ள இலட்சக்கணக்கான தொண்டர்களின் நிலையே பெரிதென எண்ணிச் செயல்பட்டார் அண்ணா.

''சட்டம் ஓர் இருட்டறை. அதில் வழக்கறிஞர் வாதம் ஓர் விளக்கு. அந்தக் கருணை ஏழைக்குக் கிட்டாது'' என்று கூறுவார்.

**ம**க்களின் தலைவர் அண்ணா என்பதற்கு இன்னுமொரு முக்கிய எடுத்துக்காட்டு :

1957ஆம் ஆண்டு வரை கழகம் பொதுத் தேர்தலில் ஈடுபடாமல், தனது ஆதரவை மட்டும் தோழமைக் கட்சிகளுக்கு வழங்கி வந்தது. இந்நிலையில் கழகமே நேரடியாகத் தேர்தலில் ஈடுபட வேண்டும் என்று கழகத்தின் முன்னணியினர் வலியுறுத்தினர். இந்த எண்ணத்துக்குப் பரவலாகக் கழகத்தில் ஆதரவும் வளர்ந்து வந்தது. கழகத்தின் தனிப் பெருந் தலைவரான அண்ணா அவர்கள் எடுக்கும் முடிவை யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. எனினும், அண்ணா அவர்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை. கழகத்தை வளர்த்துவரும் பொதுமக்களிடமே தீர்வு காண வேண்டும் என்று அறிவித்து, 1956ஆம் ஆண்டு திருச்சியில் நடைபெற்ற தி. மு. க. இரண்டாவது மாநில மாநாட்டில் வோட்டுப் பெட்டிகளை வைத்து, கழகம் பொதுத் தேர்தலில் கலந்து கொள்வதா — வேண்டாமா என்று வாக்கெடுப்பு நடத்தினர். மாநாட்டில் கலந்து கொண்ட பல்லாயிரக்கணக்கான மக்கள் வாக்குப் பதிவு செய்தனர். தேர்தலில் கழகம் கலந்து கொள்ள வேண்டும் என்ற கருத்துக்கு ஆதரவாகப் பெரும்பாலானவர்கள் வாக்களித்தனர். இதன் அடிப்படையில் 1957ம் ஆண்டு பொதுத் தேர்தலில் ஈடுபட்ட கழகம் பத்தே ஆண்டுகளில் (1967ல்) ஆட்சியை நடத்தும் பொறுப்பைப் பெற்றது. மக்கள் சமுதாயத்தின் மாபெரும் தலைவர் அண்ணா என்பதற்குச் சான்று வேறென்ன வேண்டும்?

1951ஆம் ஆண்டு சென்னை எஸ்.ஐ.ஏ.ஏ. திடலில் நடைபெற்ற தி. மு. க. முதல் மாநில மாநாட்டில் நான் வரவேற்புக் குழுத் தலைவனாகப் பணியாற்றினேன். கழகப் பொதுச் செயலாளர் அண்ணா அவர்கள்தாம் மாநாட்டுத் தலைவர். ஒலி பெருக்கியின் முன் வந்து நின்ற அண்ணா அவர்களைப் பார்த்து, ''அண்ணா வாழ்க! அண்ணா வாழ்க!'' என்று முழங்கினார்கள். இந்தக் காட்சியைக் கண்ட அண்ணா அவர்களின் கண்களில் கண்ணீர் பனித்தது. இதைக்கண்ட மக்களும் ஆனந்தக் கண்ணீர் வடித்தனர்.

தி.மு. கழகம் தொடங்கி, அண்ணா அவர்கள் தலைமை ஏற்கும் முதல் நிகழ்ச்சி இதுதான். ஒவ்வொரு கூட்டத்திலும், ''தலைவர் அவர்களே !'' என்று பேச்சைத் தொடங்கும் அண்ணா, அன்று எப்படிப் பேச்சைத் தொடங்கப் போகிறார் என்று அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்தோம்.

அண்ணா தொடங்கினார்,

''கண்ணீர்த் துளிகளே, நாட்டின் கண்மணிகளே! காணிக்கை தாருங்கள்!'' என்று !

அன்று, 'கண்ணீர்த் துளிகளே, காணிக்கை தாருங்கள்' என்று கேட்டார். இன்று தம்பிமார்களைக் கண்ணீர்க் கடலில் மிதக்க விட்டுச் சென்று விட்டார்.

எந்தப் பல்கலைக் கழகத்துக்குப் பல ஆண்டுகளுக்கு முன்பு பட்டம் பெறுவதற்குச் சென்றாரோ, அதே சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னாலேயே படுத்து உறங்கி விட்டார்.

அமைதிக்குப் பேர்போன அந்த மக்கள் தலைவனைத் தொட்டுத் தொட்டுத் தாலாட்டும் அலை ஓசை என்றும் ஓயாது. அது ஓயாதவரை அவர் புகழ் மறையாது.

## புதிய மந்திரிகள்

திரு ப. உ. சண்முகம் | திரு சி. பா. ஆதித்தன் | திரு சுப்பையா | திரு ஓ. பி. ராமன்









# ஆட்டுக்கு அருளிய ஆண்டி

ரா. கணபதி

தஞ்சை மன்னன் அமரசிம்மனுக்கு எதிரே நின்றிருந்த கணக்காயர் எதையோ நினைத்துச் சிரித்துக் கொண்டார்.

''என்ன சிரிக்கிறீர்கள்?'' என்று வினவினான் மன்னன்.

''ஒன்றுமில்லை. இன்று கிஸ்தி கட்டிய ஒரு குடியானவன் விசித்திரமான ஒரு கதை சொன்னான். அதை நினைத்தே சிரித்தேன்'' என்றார் கணக்காயர்.

''அதென்ன விசித்திரமான கதை ?'' என்று அரசன் ஆவலோடு வினவினான்.

கணக்காயர் சொன்னார்: ''அந்தக் குடியானவன் இரட்டைக் கோயிலைச் சேர்ந்தவன். கிஸ்தி கட்ட அவனிடம் பணம் இல்லை. தன்னுடைய ஆட்டை விற்றுப் பணம் பண்ணலாம் என்று கண்டியூர் சந்தைக்குப் போனான். சந்தையில் ஆடு விலை போகவில்லை. திருப்பூந்துருத்திக்குப் போனான். அந்த ஊரில் சில சேனியர்கள் ஆட்டிறைச்சிக்கு ஆசைப்பட்டு விலை பேசினார்கள். அந்த விலை குடியானவனுக்குச் சம்மதமாக இல்லை. எனவே, ஆட்டை ஓட்டிக் கொண்டு கிளம்பினான். அப்போது சேனியரில் ஒருவன் ஏதோ மந்திர உச்சாடனம் செய்தான். ஆடு செத்து விழுந்து விட்டது.

''மகாராஜா! அந்தக் குடியானவனின் திரத்தைப் பாருங்கள். 'ஆடு செத்துவிட்டது' என்பதற்காக உங்களிடம் தந்துவிட மாட்டேன்' என்று கூறிவிட்டு, செத்த ஆட்டைத் தோளில் போட்டுக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். சேனியர்கள் அதன் மீது ஏதும் செய்யவில்லை.

''குடியானவன் போன வழியில் ஒரு மாமரத்தின் கீழ், அருள் சுரக்கும் காஷாய தாரி ஒருவர் வீற்றிருந்தார். 'இந்தாப்பா, அந்த ஆட்டைக் கீழே போடு' என்று அவர் அவனிடம் கூறினார். அவன் அப்படியே செய்ய, அவர் ஆட்டின்மீது நீரைப் புரோக்ஷித்து விட்டு, தமது உள்ளங் கையால் அதைத் தடவிக் கொடுத்தார்.

''ஆடு அந்தக் கணமே உயிர் பெற்றெழுந்து விட்டது. 'ஆட்டை ஓட்டிக் கொண்டு போ' என்றார் சந்நியாசி குடியானவனிடம். அவனும் ஒரே மகிழ்ச்சியுடன் கிளம்பினான். ஆனால் ஆடு அவனோடு வந்தால்தானே! சந்நியாசியையே சுற்றிச் சுற்றி வந்தது அது.



'' 'சரி, இந்த ஆண்டிக்கு இப்படி ஒரு பந்தம் இருந்துதான் தீர வேண்டும்போலிருக்கிறது. அஜம் (ஆடு) என்றால் பிறப்பற்றது என்றும் ஓர் அர்த்தம் உண்டு. எனக்குப் பிறவாமையை நினைவுபடுத்துவதற்காக இது எப்போதும் என்னுடனேயே இருக்கக் கருணை கொண்டிருக்கிறது' என்று சொல்லிப் பெரிதாகச் சிரித்தார் துறவி. 'நான் பாடுவேன். அந்தப் பாட்டுக்குச் சரியாக என் கிருஷ்ணனை 'ஆடு ஆடு' என்பேன். ஆடு ஆடு என்று சொன்னதற்காக ஆட்டையே அனுப்பி விட்டான்' என்று சொல்லி மறுபடியும் சிரித்தார். 'ஏதடா, அந்தச் சேனியர்களை தேவலை. கடைசியில் இந்தச் சாமியார் ஆட்டைத் தேட்டை போட்டு விட்டாரே என்று பார்க்கிறாயா ? கவலைப் படாதே ! இந்தா, இந்த மண்ணைப் பிடி. கையைத் திறக்காமல் வீட்டில் போய்ப் பார்' என்றார்.

''பிடி மண்ணை எடுத்துக் குடியானவனிடம் கொடுத்தார். அவர் சொன்னது போலவே அவன் வீட்டுக்கு வந்ததும் அது சொர்ணமாகி விட்டது. அதிலிருந்துதான் கிஸ்தி கட்டுவதாக அந்தக் குடியானவன் சொன்னான்.

''அந்தக் கதையை நினைத்துத்தான் சிரித்தேன்'' என்று முடித்தார் கணக்காயர்.

மன்னன் சிந்தனையில் ஆழ்ந்தான். சிறிது போதுக்குப் பின் கேட்டான்:

''அப்படியானால் அது உமக்குக் கதையாகத்தான் தோன்றுகிறதோ ? சிரிப்பதற்கு மேல் அதில் ஏதுவும் இல்லை என்று நினைக்கிறீரோ ?'' என்றான்.

கணக்காயர் கதி கலங்கி விட்டார். மன்னன் கம்பீரமும் கனிவும் ஒருசேரக் கூறினான் : ''அந்தக் குடியானவனைப் பிடித்து அவன் குறிப்பிட்ட சாதுவின் இருப்பிடத்தைத் தெரிந்து வாரும். நான் அவரைத் தரிசிக்க வேண்டும்.''

ராஜ ஆக்ஞை நடக்கக் கேட்கவா வேண்டும்?

அமரசிம்மன் திருப்பூந்துருத்தியில் சுவாமிகளின் முன் நின்றான்.

ஞானமும் கானமும் கலந்த திவ்விய மூர்த்தியாக விளங்கினார் சுவாமிகள். அவர் மீது நினைவு தீரச் சொரிந்து கொண்டு நின்றது ஆடு. ஆட்டுக்கும் ஒரு முறை விழுந்து கும்பிட்டான் அரசன்.

''ஆட்டுக்குத்தானே நமஸ்காரம்?'' என்று புன்சிரிப்புடன் கேட்டார் யதி.

''ஆம், தங்கள் பெருமை தெரியக் காரணமாயிருந்தது இதுவே அல்லவா ?'' என்றான் அரசன்.

''உன் சிறுமை தெரியவும் அதுவேதான் காரணமாயிருந்தது'' என்று கள்ளமின்றிச் சொன்னார் சந்நியாசி.

அதற்காக அரசன் கோபிக்கவில்லை. ''தாங்கள் விளங்கச் சொல்ல வேண்டும்'' என்று விநயமாகவே கேட்டுக் கொண்டான்.

''ஒரு குடியானவன் கிஸ்தி செலுத்த முடியாமல், தன் ஆட்டை விற்கிற நிலை ஏற்படும்படி வரி விதிக்கிறாயே, அது சிறுமை இல்லையா ?'' என்று வினவினார் சுவாமிகள்.

அரசன் வெட்கினான். 'நாம் இதெல்லாம் பற்றி யோசியாமல், வரி விதிப்பு என்பது ஏதோ மாமூலான காரியம் என்று இருக்கிறோமே, இது எவ்வளவு தவறு?' என்று தன்னைத் தானே நொந்து கொண்டான்.

''இனி ஏழை மக்களைப் பாதியாதபடி வரி விதிக்கிறேன், சுவாமி! ஆனால் இதுவரை நடந்ததை நினைத்தால்தான் மனம் புண்ணுகிறது'' என்றான்.

''மனமா, புண்ணு ? புண்ணை நான் ஆற்றுகிறேன். முன்பு உன் கையிலிருந்த புண் ஆறவில்லை ? அது போல் இதுவும் ஆறட்டும்'' என்றார் சந்நியாசி.

மன்னனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

ஆர்வமயமாக சுவாமிகளின் முகத்தைப் பார்த்தான். அவரது இதழ்களில் குறும்புச் சிரிப்பு அரும்பு விட்டிருந்தது.

முன்பு அரசனது வலது கையில் நரம்புச் சிலந்தி ஏற்பட்டு அவன் சொல்லொணா இன்னல் அநுபவித்தான். எந்த வைத்தியத்துக்கும் அது கட்டுப்படவில்லை. அப்போது திருவையாற்றைச் சேர்ந்த ஓர் ஏழை பிராமணர் அரசனிடம் வந்து, அவனது புண்ணிலே ஏதோ ஒரு மூலிகையைப் பிழிந்தார். அந்தக் கணமே நரம்புச் சிலந்தி இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது.

அந்தணனுக்குப் பொன்னும் பொருளும் ஈந்த மன்னன், 'இந்த அற்புத வைத்தியத்தை எப்படி அறிந்தீர்கள்?' என வினவினான்.

அந்தணர், 'எனக்கு வைத்தியம் ஏதும் தெரியாது. ஒரு மகான் என்னிடம் இந்த மூலிகையைத் தந்து தங்கள் புண்ணில் பிழியச் சொன்னார். அவ்வளவே நான் அறிந்தது' என்று கூறிச் சென்றார்.

திருப்பூந்துருத்தி சுவாமிகள்தாம் அந்த மகான் என்பதை அமரசிம்மனால் புரிந்து கொள்ளாதிருக்க முடியுமா ?

சுவாமிகள் தன்னிடம் காட்டிய கிருபையை எண்ணி விம்மி விதிர் விதிர்த்தான் மன்னன்.

''என் கைதந்த தங்களுக்கு ஏதேனும் கைம்மாறு செய்ய ஆசைப்படுகிறேன்'' என்றான்.

''ஏழைக் குடியானவர்கள் ஆட்டையோ வேறு ஆஸ்தியையோ விற்றுக் கிஸ்தி கட்ட அவசியம் இல்லாதவாறு வரி விகிதங்களைக் குறைத்து, தர்ம பரிபாலனம் செய். அதுவே கைம்மாறு'' என்றார் சுவாமிகள்.

எல்லாம் துறந்த அவருக்கு யார் பிரதி உபகாரம் புரிய முடியும்? இருப்பினும் மன்னன் மனம் திருப்தி அடையவில்லை.

அப்போது ஆடு ஓர் அற்புதம் செய்தது. ஆட்டை அறிவின்மைக்கு உருவமாகச் சொல்வார்கள். புத்தியீனர்களை 'அஜம்' என்றே அழைப்பதுண்டு. ஆனால் இந்த ஆடோ பேரறிவோடு ஒரு காரியம் செய்தது. தன் காலால் பூமியில் கோடு இழுத்தபடி மாமரத்தைச் சுற்றி வந்தது. மன்னன் புரிந்து கொண்டான்.

கோடிழுத்த எல்லைக்குள் இருந்த நிலத்தை சுவாமிகளுக்கே பட்டா செய்து தந்தான். அங்கு சுவாமிகளுக்கு இருக்கையும் ஆலயமும் திருக்குளமும் எடுத்தான்.

சுவாமிகளோ இவற்றில் சிறிதும் சம்பந்தமின்றி, கண்ணனைப் பாடிக் கொண்டும், ஆட்டுக்குத் தழைகளை ஊட்டிக் கொண்டும் ஆனந்தமாக இருந்து வந்தார்.

**கா**லம் சென்றது. சுவாமிகளிடமிருந்து அரசனுக்கு அழைப்பு சென்றது.

பரிவாரம் புடைசூழ அரசன் திருப்பூந்துருத்திக்கு வந்தான். அங்கு அந்தணர்களும், அடியார்களும் குழுமி இருந்தனர்.

சுவாமிகள், ஆலயத்தின் கருவறையை அடைந்தார். கருவில் புகாத பெருநிலையை அடைந்து, கர்ப்பூரக் குன்று எரிவது போல் அப்படியே கண்ணன் என்ற கரிய ஜோதியில் கனிந்து விட்டார்.

**அ**து மாசி மாதத்து சுக்லபட்சத்து அஷ்டமி திதி. பக்தியும், பஜனையும், சங்கீர்த்தனமும் அறிந்தவர்களுக்கெல்லாம் அது ஒரு மகத்தான புண்ணிய திதி.

லீலாசுகருடனும், ஜயதேவருடனும் வைத்து மதிக்கத் தக்கவரும், 'கிருஷ்ண லீலா தரங்கிணி' என்ற இசை நூலைத் தந்தவருமான ஸ்ரீமந் நாராயண தீர்த்த சுவாமிகள் திருப்பூந்துருத்தியில் கண்ணனோடு கலந்த தினம் அல்லவா அது ?

இன்றும் அந்த நன்னாளில் அங்கு விழாவும் ஆராதனையும் நடக்கின்றன. நாராயண தீர்த்தருக்கு நிழல் தந்த மாமரமும், அவர் வணங்கிய கோயிலும் அங்கு இன்றும் இருக்கின்றன. அங்கு சங்கீதம் இருக்கிறது; பக்தி இருக்கிறது.

யாவற்றுக்கும் மேலாக புத்தனையும், இயேசுவையும் போல் ஆட்டிடம் பரிவு கொண்டு பரிபாலித்த அன்பு உள்ளமும் அங்கு வெள்ளையாக வாழ்கிறது !

---

தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் மார்க்கத்திலுள்ள திருப்பூந்துருத்தியில் இம்மாதம் 21ந் தேதியிலிருந்து 26ந் தேதி வரை ஸ்ரீ நாராயணதீர்த்த சுவாமிகளின் ஆராதனை மகோற்சவம் நடக்கிறது. அஷ்டமியாகிய 24ந் தேதியன்று சுவாமிகள் கைவல்யம் பெற்ற தினத்தில் விசேஷ வழிபாடு நடைபெறும். சுவாமிகளின் கிருஷ்ண லீலா தரங்கிணிப் பாடல்களைக் கொண்ட இசைக் கச்சேரிகள் நடக்கும். ஆராதனை உற்சவக் குழுவினர், 'கிருஷ்ண லீலா – தரங்கிணி'யை நல்ல முறையில் பதிப்பித்து வெளியிடவிருக்கிறார்கள். பக்தர்கள் விழாவில் கலந்து கொள்ளுமாறும் புத்தகப் பிரசுரத்துக்குப் பொருளுதவி புரியுமாறும் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர். நன்கொடை அனுப்ப வேண்டிய விலாசம்:

திரு எஸ். வேங்கடராமன், பொருளாளர், ஸ்ரீ நாராயண தீர்த்த சுவாமி ஆராதனை உற்சவக்கமிட்டி, 1-8 அக்கிரகாரம், திருப்பூந்துருத்தி, தஞ்சைமாவட்டம்.

# கல்லூரியில் கலை விழா

கிண்டி பொறியியல் கல்லூரி கலை அரங்கக் கட்டடம் கண் சிமிட்டி வரவேற்றுக் கொண்டிருந்தது.

கட்டடமாவது கண் சிமிட்டுவதாவது ?

ஆமாம்! வண்ண விளக்குகளை நுழைவு வாயிலின் மேல் தளத்தில் மறைவாகப் பொருத்தி அவைகளை மாற்றி மாற்றி ஏற்றி அணைக்கும் போது கண் இமைகளில் காணும் கவர்ச்சி அந்த ஒளி பேதங்களிலும் தோன்றுகிறது.

''இங்கே என்ன விசேஷம்?''

''கல்லூரிகள் நாடகப் போட்டி! இன்றைக்குத்தான் ஆரம்பம்! ஐந்து நாள் கல்யாணம் சார்! அமர்க்களமாக இருக்கும்! உள்ளே போங்கோ!'' என்று உபசரிக்கிறார் ஒரு மாணவ நண்பர்.



மாணவர்களின் கைவண்ணம்



மாணவ ரசிகர்கள்

கல்லூரி மாணவர்களிடையே ஓர் இடம் பிடித்து உட்காருகிறேன்.

மேடையில் முகம்மத் — பின் — துக்ளக் நின்று கொண்டிருக்கிறார்.

''சேச்சே !.... எதைத்தான், யாருதான் காப்பி அடிப்பது என்பது இல்லையா ?'' என்று அங்கலாய்க்கிறார் ஒரு மாணவர்.

''காப்பியுமில்லே, சாயாவுமில்லே. அசல் ஒரிஜினல் கோல்ட் ஸ்பாட் ! இவரு முகம்மது — மூன் — துக்ளக்! 'சோ' இவருக்குப் பின்னுலே வந்த முகம்மது — பின் - துக்ளக்!'' என்ற பதில் பின் வரிசையிலிருந்து சவாலாக ஒலிக்கிறது.

''மேடையிலே யாருடா? நம்ப தியாகராஜனு? இருமொழிக் கொள்கையை அப்படியே கடைப்பிடிக்கிருனே! அக்ரகாரபாஷையையும் அசல் ரௌடி பாஷையையும், பக்கத்திலே பக்கத்திலே இருக்கிற இரண்டு ரேடியோ ஸ்டேஷன்கள் ஒலிபரப்புற மாதிரி ஜமாய்க்கிருனே!''

அந்த நாடகம் முடியும் வரையில் அரங்கத்தில் சிரிப்பொலி அலைஅலையாக எழுந்து ஓய்கிறது.

கிண்டி பொறியியல் கல்லூரி மாணவர்களின் தயாரிப்பு இந்த 'மூன் துக்ளக்'. போட்டியில் கலந்து கொள்ளாமல், விருந்தினர்களை மகிழ்விக்க முன்னதாகவே தங்கள் திறமையை முக்கால் மணி நேரத்தில் காண்பித்துத் தீர்த்தார்கள்.

அடுத்த நாடகம் தொடங்குவதற்கு முன்னுல் இடைவேளை.

லதா மங்கேஷ்கரின் குரல் ரிக்கார்ட் மூலம் இனிமையாக ஒலிக்கத் தொடங்குகிறது.



(அரசியல்வாதி) பச்சையப்பன் கல்லூரி

முகம்மது மூன் துக்ளக்





'கடாங்காவிலிருந்து வந்தவர்'



பரிசளித்தவர்

அவ்வளவுதான்! மாணவர்களின் கண்டனக் குரல் 'உஷ்' என்று புயலாக வீசத் தொடங்குகிறது. ஒரே இடைவிடாத 'உஷ்'தான்.

''உங்களுக்கு ஹிந்திப் பாட்டு பிடிக்காதா?'' என்று பக்கத்தில் இருக்கும் மாணவரிடம் கேட்கிறேன்.

அவர் குரலைச் சிரமப்பட்டுத் தணித்துக் கொள்கிறார். ''எனக்கு லதா பாட்டுன்னு உயிர் சார்! வீட்டிலே நினைத்தபோதெல்லாம் அந்த சங்கீதத்தில் மூழ்கிக் கொண்டிருப்பேன்!...ஆனால் இங்கே எல்லாருடனும் சேர்ந்து....''

அவர் முடிக்க வேண்டிய அவசியமே இல்லை. அவர் மனம் புரிகிறது. சூழ்நிலை புரிகிறது. ரிக்கார்ட் சங்கீதம் இடைவழியிலேயே தேய்ந்து மறைகிறது.

மேடையில் மைக் முன் அன்பர் 'லலித் ஷா' தோன்றுகிறார்.

''பெண்கள் கிறிஸ்துவக் கல்லூரி மாணவிகள் நாடகம் நடத்த வரவில்லை. ஆகையால் திரைப்பட நுணுக்கக் கலைக் கல்லூரி மாணவர்கள் தங்கள் நாடகத்தை அடுத்தாற்போல் நடித்துக் காட்டுவார்கள்'' என்கிறார் ஷா.

''ஹூம்! மெஸ்ஸிற்குச் சாப்பிடக் கிளம்பலாம்! நேரமாகிறது'' என்று இதுவரையில் காலத்தை மறந்திருந்த ஒரு கோஷ்டி திடீரென்று எழுந்து வெளிநடப்பு செய்கிறது. பசியைவிட ஏமாற்றமே அந்த நடையில் தெரிகிறது.

தகதகவென்று ஜிகினா உடைகள் பளபளக்கச் சக்கரவர்த்தி அசோகன் மேடையில் தோன்றுகிறான். நாடகத்தின் பெயர் 'ஏழாம் நாள்'.

''சினிமாக் கல்லூரி! அதுதான் டிரஸ் பிரமாதம்!''

''அசோகனுக்கும் மைக்குக்கும் சண்டையா? கிட்டவே போகமாட்டேன் என்கிறானே?''

''அது ஸ்டீரியோ போனிக் மைக்! ஸ்திரீ பாத்திரங்கள் பேசினால்தான் எடுக்கும்.''



ஆஸ்தான போடோகிராபர் ராமு

''ஐயையோ! ...... அந்த ராணி வேஷம் பேசறான். அப்பவும் கேட்கலியே!''

''ராணி மைக்கம்மா!''

''ராணி மங்கம்மாவுக்கு அக்காவா?''

அசோகன் அசல் நாடக பாணியில், ''ஹஹ்ஹஹ்ஹஹ் ஹா'' என்று சிரிக்கிறான்.

மாணவர் குழாமும் அதே சுருதியில் ஒரு 'ஹஹ்ஹஹ் ஹா' கோஷம் எழுப்புகிறது.

இரண்டாம் நாள் மூன்று கல்லூரிகள் தங்கள் திறமையைக் காட்டுவதாக ஏற்பாடு. ஸ்டான்லி மெடிகல் கல்லூரியும் லயோலாக் கல்லூரியும் கடைசி நேரத்தில் தங்கள் பங்கை ரத்து செய்து விடவே, முழுப் பொறுப்பையும் புதுக் கல்லூரி தாங்க வேண்டிய

கலைப் பிரிவு காரியதரிசி கிருஷ்ணன்



னாயிற்று. 'காதலிக்க யாருமில்லை' என்பது புதுக் கல்லூரி மாணவர்களின் நாடகம்.

கதாநாயகியாக நடித்த மாணவர் கொஞ்சம்கூடச் சிரமப்படாமல் கழுத்தை ஒரு பக்கம் சாய்த்தவாறே நடித்தார். புடவைத் தலைப்பு தோளிலிருந்து நழுவிவிடலாம் என்ற பயமாகவும் இருக்கலாம். பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்குத் தங்களுக்குத்தான் கழுத்துச் சுளுக்கு வந்து விட்டதோ என்ற பிரமையும் ஏற்பட்டது.

மூன்றும் நான் அறிவிக்கப் பட்டிருந்த மூன்று கல்லூரிகளுமே தங்கள் நடிக மணிகளை நேரத்தோடு அரங்கத்துக்கு அனுப்பி வைத்திருந்தன. சென்ட்ரல் பாலிடெக்னிக்கின் நாடகம் 'யாருக்கு மாப்பிள்ளை யாரோ'. மங்களம் மாமியாக மாணவர் மணிகண்டன் மேடைக்கு வந்தவுடன் ஒரே கலகலப்பு.

''பட்டு மாமி சீசன் இன்னும் ஓயலியா?''

''அடேயப்பா! என்ன விரட்டு விரட்டறு?''

''நாம் சில புரொபசர்களை விரட்டற மாதிரியா?''

''இன்ஜினீயரிங் காலேஜ் அட்மிஷன் விவகாரங்களைப் பற்றி எப்படியாவது ஒரு ஜோக் அடிச்சுடறாங்க!''

''இது இன்ஜினீயரிங் காலேஜ் மேடையில்லையா? குரு பக்தி, தெய்வ பக்திங்கற மாதிரி மேடைப்பக்தின்னு வைச்சுக்கயேன்!''

அழகப்ப செட்டியார் பொறியியல் கல்லூரி அடுத்தாற்போல நடித்துக் காட்டிய நாடகம் ''கண்டவனே, கண்கண்ட கணவர்!''

''ஜோக் இருக்கு, சரக்கு இல்லையே?''

''மாடர்ன் டிராமாவைப் பற்றி உனக்கு ஒண்ணுமே தெரியாதுடா!''

''நான் என்ன, அரிஸ்டோபினிஸ், சோபாகிளிஸ் இவாகிட்டே எல்லாம் அந்தக் காலத்திலே அப்ரண்டிஸா இருந்தவனு? நானும் மாடர்ன்தாண்டா!''

தாம்பரம் கிறிஸ்துவக் கல்லூரி மாணவர்கள், தமிழ் பேசும் பாணியிலேயே ஆங்கிலத்தைப் பேசி, ஓர் அருமையான சிறு நகைச்சுவை நாடகத்தை அளித்தார்கள். நடிப்பும் உழைப்பும் கலந்திருந்தது. 'பி. ஜி.' என்று பெயர்.

நான்காம் நாள் நான்கு கல்லூரிகளின் பெயர்கள் நிகழ்ச்சி நிரலில் இருந்தன. ஆனால் கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல் ரியும், இண்டியன் இன்ஸ்டிட்யூட் ஆப் டெக்னலஜியும் பின்வாங்கிவிடவே, எஸ். ஐ. இ. டி. மகளிர் கல்லூரியும், பச்சையப்பன் கல்லூரியும் தங்கள் பணியைச் செய்ய முன் வந்தன.

'கடாங்காவிலிருந்து வந்தவன்' என்ற ஆங்கில நாடகம் எஸ். ஐ. இ. டி. மாணவிகளினுடையது. பாண்டும் கோட்டும் அணிந்து பெண்கள் மேடையில் வளைய வந்தார்கள். மாணவர்கள் கைவலிக்கத் தட்டிப் பாராட்டிக் கொண்டேஎஎஎ இருந்தார்கள்.

''காதிலே டயலாக் ஒன்றும் விழ மாட்டேன் என்கிறதே!''

''அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்கிறார்கள். நமக்காகவா?''

''விழற டயலாக்கும் புரியலையே!''

''தேத்து இங்கிலீஷ் புரிஞ்சதே!''

''அது தமிழ் இங்கிலீஷ்! இது இங்கிலீஷ் இங்கிலீஷ்!''

'அரசியல்வாதி' என்ற பச்சையப்பன் கல்லூரி மாணவர்களின் நாடகம், துணிச்சலாக இன்றைய அரசியலை, மந்திரிகள், மாணவர்கள் பாத்திரங்களுடன் படம் பிடித்துக் காட்டியது.

''கொன்னுட்டாண்டா!''

''பிச்சுட்டாண்டா!''

''மந்திரியோட பியூன் எப்படிச் சமாளிக்கிறான் பாரு!''

''பழைய மந்திரி புது மந்திரிகிட்டே எப்படிக் குழையறான் பாரு!''

மனம் நிறைந்த கரகோஷத்துடன் போட்டிகள் முற்றுப் பெற்றன. வெளியே வரும் போது பொறியியல் கல்லூரி மாணவர்களான இஸ்மத், துளசி, கணபதி ஆகிய மூவரும் சேர்ந்து தீட்டிய ரங்கோலி ராதாகிருஷ்ணா நம்மைப் பிரமிக்க வைக்கிறது. ஒரு மாணவரால் தீட்டப்பட்ட தில்லானா மோகனாம்பாள் வொஜி சண்முகசுந்தரம் ஓவியங்களும் சுவரில் காணப்படுகின்றன.

கடைசி நாள் பரிசளிப்பு விழா. பரிசளிப்பவர் சௌகார் ஜானகி. கலை அரங்குக்குள் சௌகார் ஜானகி நுழையும்போது 'அடுத்தாத்து அம்புஜத்தைப் பார்த்தேளா' பாட்டு ஒலிபரப்பப்படுகிறது.

கலைப் பிரிவு காரியதரிசி வரவேற்புக் கூற எழுந்திருக்கிறார்

அவருக்கு ஒரு 'உஷ்ஷ்ஷ்...ஷ்' வரவேற்பு அளிக்கிறார்கள் மாணவர்கள்.

போட்டி நீதிபதிகளில் ஒருவராக இருந்த திரு பி. எஸ். ராமையா பேச எழுந்திருக்கிறார்.

''தாத்தா!'' என்ற குரல் அரங்கத்தின் மூலையிலிருந்து எழுகிறது.

''என் பையன்தான் இந்தக் கல்லூரியில் படித்தான். இப்போது என் பேரப் பையனும் படிக்கிறான் போலிருக்கிறது!'' என்று சமாளிக்கிறார் ராமையா.

பரிசுகளை வழங்கிவிட்டு சௌகார் ஜானகி நாலு வார்த்தைகள் ஆங்கிலத்தில் பேசுகிறார். மாணவர்கள் அரசியலை விட்டு ஒதுங்கி நிற்க வேண்டும் என்று பொருள்படும் படி பேசுகிறார்.

சௌகார் ஜானகி அமர்ந்ததும், காமிராவும், தோளுமாகக் கல்லூரி இளைஞர்கள் 'பளிச் பளிச்' என்று படம் எடுக்க ஆரம்பிக்கிறார்கள்.

''நம்ப ஆஸ்தான போட்டோகிராபர் ராமு இருபது ரோல் படம் எடுத்திருப்பானு?''

''மேலேயே இருக்கும். வெறும் படுதாவைக்கூட விடாமல் எடுக்கிறான்.''

இந்த சம்பாஷணையை ஒப்புக் கொள்வது போல, அந்த இளைஞர் ராமு இந்தப் பக்கமும் திரும்பி ஒரு படம் பிடிக்கிறார். அவர் கிண்டி பொறியியல் கல்லூரி மூன்றும் ஆண்டு மாணவர்.

மாணவர் உலகமே தனி! அடேயப்பா! என்ன உற்சாகம்! ஐந்து நாள் கல்யாணம்! இன்னும் ஐந்து வருடங்களுக்குத் தேவையான குஷியும், கிண்டல் சுவையும் லாபம்.

**- கோமதி சுவாமிநாதன்**

# புதியது!

## தலைவலியைப் போக்க உபரி வலிமையுள்ள வலிநிவாரணி!

# பவரின்

**பவரின் டாப்யூல்* வலியை முறியடிக்கிறது.**

தலைவலி, தசை வலி, பல் வலி, ஜலதோஷம், ஃப்ளு முதலியவற்றால் ஏற்படும் அவதிகளைச் சக்தியுடன் அபாயமற்ற முறையில் எதிர்க்கிறது.

*விழுங்க எளிதான ஓர் காப்ஸ்யூல் வடிவ வில்லை.

ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்: ஜெஃப்ரி மானேர்ஸ் & கம்பெனி லிட்.




PW-5-152 TM

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

நான்காம் அத்தியாயம்

## நள்ளிரவில்

இரவு போஜனம் ஆன பிறகு வந்தியத்தேவன் கலங்கரை விளக்கின் தலைவரைத் தனிப்படச் சந்தித்து இலங்கைக்குத் தான் அவசரமாகப் போக வேண்டும் என்பதைத் தெரிவித்தான். தியாக விடங்கக் கரையர் என்னும் பெயருடைய அப்பெரியவர் தமது வருத்தத்தைத் தெரிவித்தார்.

"இந்தக் கரையோரத்தில் எத்தனையோ பெரிய படகுகளும் சிறிய படகுகளும் ஒரு காலத்தில் இருந்தன. அவையெல்லாம் இப்போது சேதுக் கரைக்குப் போய்விட்டன. இலங்கையில் உள்ள நமது சைன்யத்தின் உதவிக்காகத்தான் போயிருக்கின்றன. எனக்குச் சொந்தமாக இரண்டு படகுகள் உண்டு. அவற்றுள் ஒன்றில் நேற்று வந்த





இரண்டு மனிதர்களை ஏற்றிக் கொண்டு என் மகன் போயிருக்கிறான். அவன் எப்போது திரும்பி வருவான் என்று தெரியாது. என்ன செய்யட்டும்?'' என்றார்.

''அந்த மனிதர்கள் யார்? அவர்கள் ஒருமாதிரி ஆட்கள் என்று தங்கள் குமாரி கூறினாளே?''

''ஆமாம்; அவர்களைக் கண்டால் எனக்கும் பிடிக்கவில்லைதான். அவர்கள் யார் என்பதும் தெரியவில்லை; எதற்காகப் போகிறார்கள் என்பதும் தெரியவில்லை. பழுவேட்டரையரின் பனை இலச்சினை அவர்களிடம் இருந்தது. அப்படியும் நான் என் மகனைப் போகச் சொல்லியிருக்க மாட்டேன். ஆனால் என் மருமகள் மிகப் பணத்தாசை பிடித்தவள். பை நிறையப் பணம் கொடுப்பதாக அவர்கள் சொன்னதைக் கேட்டுவிட்டுப் புருஷன் போக வேண்டும் என்று வற்புறுத்தினாள்...''

''இது என்ன ஐயா, வேடிக்கை? வீட்டில் உலக அனுபவம் இல்லாத ஒரு சிறு பெண் சொன்னால், அதைத்தான் உங்கள் மகன் கேட்க வேண்டுமா?'' என்றான் வந்தியத் தேவன். பிறகு சிறிது தயக்கத்துடன், ''மன்னித்துக் கொள்ளுங்கள். அது தங்கள் குடும்ப விஷயம்!'' என்றான்.

வந்தியத் தேவனுக்கு அப்போது சேந்தன் அமுதன் இக் குடும்பத்தைப் பற்றிக் கூறியது நினைவு வந்தது.

சேந்தன் அமுதனையும் அவன் தாயாரையும் அவர்கள் வீட்டில் தான் தங்கியிருந்ததையும் பற்றி வந்தியத் தேவன் அவரிடம் கூறினான்.

''ஆகா! அந்த ஆள் நீதானா? உன்னைப் பற்றிச் செய்தி இங்கே முன்னமே வந்துவிட்டது. உன்னை நாடெங்கும் தேடுகிறார்களாமே?''

''இருக்கலாம்; அதைப் பற்றி எனக்குத் தெரியாது.''

''நீ ஏன் இலங்கைக்கு அவசரமாகப் போக விரும்புகிறாய் என்று இப்போது எனக்குத் தெரிகிறது.''

''பெரியவரே! தாங்கள் நினைப்பது சரியல்ல. என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக மட்டும் நான் இலங்கைக்குப் போகவில்லை. அங்கேயுள்ள ஒருவருக்கு மிக முக்கியமான ஓலை ஒன்று கொண்டு போகிறேன். தாங்கள் வேண்டுமானால் அதைப் பார்க்கலாம்.''

''தேவையில்லை. இளைய பிராட்டி உன்னைப் பற்றி எழுதியிருப்பதே எனக்குப் போதும். ஆனால் இச்சமயம் நீ கேட்கும் உதவி என்னால் செய்ய முடியவில்லையே?''

''இன்னொரு படகு இருப்பதாகச் சொன்னீர்களே?''

''படகு இருக்கிறது. தள்ளுவதற்கு ஆள் இல்லை. நீயும் உன்னுடைய சிநேகிதனும் தள்ளிக் கொண்டு போவதாயிருந்தால் தருகிறேன்...''

''எங்கள் இருவருக்கும் படகு ஓட்டத் தெரியாது. எனக்குத் தண்ணீர் என்றாலே கொஞ்சம் பயம். அதிலும் கடல் என்றால்...''

''படகு ஓட்டத் தெரிந்தாலும் அநுபவம் இல்லாதவர்கள் கடலில் படகு ஓட்ட முடியாது. கடலில் கொஞ்ச தூரம் போய்விட்டால் கரை மறைந்து விடும். அப்புறம் திசை தெரியாமல் திண்டாட வேண்டி வரும்.''

''என்னுடன் வந்தவனை நான் அழைத்துப் போவதற்கும் இல்லை. அவனை மூலிகை சேகரிப்பதற்காக இங்கே விட்டுப் போக வேண்டும். ஏதாவது ஒரு வழி சொல்லி நீங்கள் தான் உதவி செய்ய வேண்டும்.''

''ஒரு வழி இருக்கிறது. அது எளிதில் நடக்கக் கூடியதன்று. நீயும் முயற்சி செய்து பார்! அதிர்ஷ்டம் உன் பக்கம் இருந்தால்...''

''நான் என்ன செய்ய வேண்டும் பெரியவரே! சொன்னால் கட்டாயம் செய்கிறேன்'' என்றான் வந்தியத்தேவன்.

''இந்தப் பகுதியிலேயே பூங்குழலியைப் போல் சாமர்த்தியமாகப் படகு தள்ளத் தெரிந்தவர்கள் வேறு யாரும் இல்லை. இலங்கைக்கு எத்தனையோ தடவை போய் வந்திருக்கிறாள். அவளிடம் நான் சொல்லுகிறேன்; நீயும் கேட்டுப் பார்!''

''இப்போதே கூப்பிடுங்களேன்; கேட்டுப் பார்க்கலாம்.''

''வேண்டாம். மிகப் பிடிவாதக்காரி. இப்போது உடனே கேட்டு 'முடியாது' என்று சொல்லி விட்டால் அப்புறம் அவளுடைய மனத்தை மாற்ற முடியாது. நாளைக்கு நல்ல சமயம் நோக்கி அவளிடம் நான் சொல்லுகிறேன். நீயும் தனியே பார்த்துக் கேள்!''

இவ்விதம் தியாக விடங்கக் கரையர் கூறிவிட்டுக் கலங்கரை விளக்கை நோக்கிச் சென்றார்.

அவருடைய வீட்டுத் திண்ணையில் வந்தியத் தேவன் படுத்தான். அவனுடன் வந்த வைத்தியர் மகன் முன்னமே தூங்கிப் போய் விட்டான். வந்தியத் தேவனுக்கும் நீண்ட பிரயாணம் செய்த களைப்பினால் தூக்கம் கண்ணைச் சுற்றிக் கொண்டு வந்தது. விரைவில் தூங்கிப் போனான்.

திடீரென்று தூக்கம் கலைந்தது. கதவு திறக்கும் ஓசை கேட்டது. களைத்து மூடியிருந்த கண் இமைகளைக் கஷ்டப்பட்டு வந்தியத்தேவன் திறந்து பார்த்தான். ஓர் உருவம் வீட்டுக்குள்ளேயிருந்து வெளியேறிச் சென்றது தெரிந்தது. மேலும் கவனமாகப் பார்த்தான். அது ஒரு பெண்ணின் உருவம் என்று கண்டான். கலங்கரை விளக்கின் வெளிச்சம் அந்த உருவத்தின்மேல் விழுந்தது. ஆ! அவள் பூங்குழலிதான்! சந்தேகமில்லை.

அவள் என்னவோ நம்மிடம் சொன்னாளே? ''நடு நிசியில் என்னைத் தொடர்ந்து வா! என் காதலர்களைக் காட்டுகிறேன்!'' என்றாள். அது ஏதோ விளையாட்டுப் பேச்சு என்றல்லவா அப்போது நினைத்தோம்? இப்போது இவள் உண்மையிலேயே நள்ளிரவில் எழுந்து போகிறாளே? எங்கே போகிறாள்? காதலனையோ, காதலர்களையோ பார்க்கப் போவதாயிருந்தால் அப்படி நம்மிடம் சொல்வாளா? 'பின்தொடர்ந்து

வந்தால் காட்டுகிறேன்' என்பாளா? இதில் ஏதோ மர்மமான பொருள் இருக்க வேண்டும்! அல்லது ஒருவேளை... எப்படியிருந்தாலும் பின்தொடர்ந்து போய் ஏன் பார்க்கக் கூடாது? நாளைக்கு இவளிடம் நயமாகப் பேசி இலங்கைக்குப் படகு தள்ளிக்கொண்டு வரச் சம்மதிக்கப் பண்ண வேண்டும். அதற்கு இப்போது இவளைத் தொடர்ந்து போவது உதவியா யிருக்கலாம். ஏதாவது இவளுக்கு அபாயம் வரக் கூடும்! அதிலிருந்து இவளைக் காப்பாற்றினால் நாளைக்கு நாம் கேட்பதற்கு இணங்கக் கூடும் அல்லவா?

வந்தியத் தேவன் சத்தம் செய்யாமல் எழுந்தான். பூங்குழலி போகும் வழியைப் பிடித்துக் கொண்டே போனான். சாயங்காலம் சேற்றுப் பள்ளத்தில் விழுந்தபோது அடைந்த அநுபவம் அவனுக்கு நன்றாய் ஞாபகம் இருந்தது. அம்மாதிரி மறுபடியும் நேர்வதை அவன் விரும்பவில்லை. ஆகையால் பூங்குழலியை அவன் பார்வையிலிருந்து தவற விட்டுவிடக் கூடாது.

கலங்கரை விளக்கிலிருந்து கொஞ்ச தூரம் வரை வெட்ட வெளியாக இருந்தது. ஆகையால் பூங்குழலியின் உருவமும் தெரிந்து கொண்டிருந்தது. அவள் போன வழியே போவதில் கஷ்டம் ஒன்றும் இல்லை. அவள் அருகில் போய்ப் பிடித்துவிட வேண்டும் என்று எண்ணி விரைவாக நடந்தான். ஆனால் அது சாத்தியப்படவில்லை. இவன் வேகமாய்நடக்க, நடக்க, அவளுடைய நடை வேகமும் அதிகரித்துக் கொண்டே இருந்தது. இவன் பின்தொடர்ந்து வருவதை அவள் கவனித்ததாகவே தெரியவில்லை.

திறந்த வெளியைக் கடந்ததும் காடு அடர்ந்த மேட்டுப் பாங்கான பூமி வந்தது. நேரே அதன் பேரில் ஏறாமல் பூங்குழலி அந்த மேட்டைச் சுற்றிக் கொண்டே போனாள். மேடும் காடும் முடிந்த முனை வந்தது. அந்த முனையை வளைத்துக் கொண்டு சென்றாள். வந்தியத் தேவனும் விரைந்து சென்று அந்த முனை திரும்பியதும் சற்றுத் தூரத்தில் அவள் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தான். ''நல்ல வேளை!'' என்று தைரியம் கொண்டான். ஆனால் அடுத்த கணத்தில் திடீரென்று அவளைக் காணவில்லை!

எப்படித் திடீரென்று மறைந்திருப்பாள்? இது என்ன மாயமா மந்திரமா? அங்கே ஏதாவது பள்ளம் இருந்திருக்குமோ? ஓட்டமும் நடையுமாகப் போய்ச் சுமாராகப் பூங்குழலி எங்கே நின்று மறைந்தாள் என்று தோன்றியதோ, அந்த இடத்துக்கு வந்தான். அங்கே நின்று நாலா பக்கமும் பார்த்தான். மூன்று பக்கங்களில் அவள் போயிருக்க முடியாது. போயிருந்தால் தன் கண்ணிலிருந்து மறைந்திருக்க முடியாது. அவ்விடத்தில் காலை ஜாக்கிரதையாக ஊன்றி வைத்துப் பார்த்துச் சேறு இடையாது என்பதையும் நிச்சயப்படுத்திக் கொண்டான். ஆகையால் மேட்டின் மேல் ஏறிக் காட்டுக்குள்ளேதான் போயிருக்க வேண்டும்.

இன்னும் கொஞ்சம் உற்றுப்பார்த்ததில், குத்துச் செடிகள் அடர்ந்த அந்த மேட்டில் ஏறுவதற்கு ஒற்றையடிப் பாதை ஒன்று இருப்பது தெரிய வந்தது. வந்தியத் தேவன் அதில் ஏறினான். ஏறும்போது 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. அங்கே கலங்கரை விளக்கின் மங்கிய வெளிச்சமும் வரவில்லை. மாலைப் பிறை முன்னமேயே கடலில் மூழ்கி மறைந்துவிட்டது. மினுமினுத்த நட்சத்திரங்களின் வெளிச்சத்திலே வழி கண்டுபிடித்துப் போக வேண்டி யிருந்தது. அந்த வழியையும் கொஞ்ச தூரத்துக்கு அப்பால் காணவில்லை. குத்துச் செடிகளும் குட்டை மரங்களும் பயங்கர வடிவங்களைப் பெற்றன. அவற்றின் நிழல்கள் கரிய பேய்களாக மாறின. செடிகளின் இலைகள் ஆடியபோது நிழல்களும் அசைந்தன. ஒவ்வோர் அசைவும் வந்தியத் தேவனுடைய நெஞ்சை அசைத்தது. அந்தக் கரிய இருளிலும் நிழலிலும் எங்கே என்ன அபாயம் காத்திருக்கிறதென்று யார் கண்டது? விஷ ஜந்துக்கள், கொடிய விலங்குகள் பதுங்கி யிருந்து பாயலாம். அபாயம் மேலிருந்து வரலாம். பக்கங்களிலிருந்து வரலாம். பின்னாலிருந்தும் வரலாம். அடடா! இது என்ன இங்கே வந்து அகப்பட்டுக் கொண்டோம்? கையில் வேலைக் கூட எடுத்து வரவில்லையே?

அது என்ன சலசலப்புச் சத்தம்? அந்த மரத்தின் மேல் தெரியும் அந்தக் கரிய உருவம் என்ன? அந்தப் புதரின் இருளில் இரண்டு சிறிய ஒளிப் பொட்டுக்கள் மின்னுகின்றனவே, அவை என்னவா யிருக்கும்?

வந்தியத்தேவனுடைய கால்கள் அவனை அறியாமல் நடுங்கின. சரி! சரி! இங்கே என்ன நமக்கு வேலை? எதற்காக இங்கே வந்தோம்? — என்ன அறிவீனம்? உடனே இறங்கிப் போய் விட வேண்டியதுதான்!

இறங்கலாம் என்று எண்ணித் திரும்ப யத்தனித்த தருணத்தில் ஒரு குரல் கேட்டது. நெஞ்சைப் பிளக்கும் குரல்;



பெண்ணின் குரல். ஒரு விம்மல் சத்தம். பிறகு இந்தப் பாடல்: —

**"அலைகடலும் ஓய்ந்திருக்க**
**அகக்கடல்தான் பொங்குவதேன்?**
**நிலமகளும் துயிலுகையில்**
**நெஞ்சகந்தான் விம்முவதேன்?..."**

வந்தியத்தேவன் அம்மேட்டிலிருந்து கீழே இறங்கிச் செல்லும் யோசனையை விட்டு விட்டான். குரல் வந்த இடம் நோக்கி மேலே ஏறினான். விரைவில் மேட்டின் உச்சி தெரிந்தது. அங்கே அவள் நின்று கொண்டிருந்தாள். பூங்குழலிதான். பாடியது அவள்தான். வானத்தில் சுடர்விட்ட நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டு பாடினாள். அந்த விண் மீன்களையே அவளுடைய பாட்டைக் கேட்கும் ரஸிக மகாசபையாக நினைத்துக் கொண்டு பாடினாள் போலும்! நட்சத்திரங்களும் அந்தச் சோக கீதத்தைக் கேட்டு உடல் சிலிர்த்தன. நட்சத்திரங்களில் ஒன்று தூமகேது. அதிலிருந்து கிளம்பிய கதிரின் கற்றை நீண்ட தூரம் விசிறி போல் விரிந்து படர்ந்திருந்தது. மேட்டின் உச்சியில் அந்தப் பெண்ணின் நிழல் வடிவமும், அவளுடைய குரலும் கீதமும், வானத்தில் தூமகேதுவும் சேர்ந்து வந்தியத்தேவனைத் தன் வயமிழக்கச் செய்தன. அவனுடைய கால்கள் அவனை உச்சி மேட்டில் கொண்டு போய்ச் சேர்த்தன.

பூங்குழலிக்கு எதிரில் நேருக்கு நேராக அவன் நின்றான். அவளுக்குப் பின்னால், வெகு தொலைவு என்று காணப்பட்ட இடத்தில், கலங்கரை விளக்கின் சிவந்த ஒளி தோன்றியது. அதையொட்டி விரிந்த கடல் பரந்து கிடந்தது. கடலுக்கு எல்லையிட்டு வரையறுத்ததுபோல் வெள்ளிய அலைக் கோடு நீண்டு வளைந்து சென்றது.

"வந்து விட்டாயா? திண்ணையில் கும்பகர்ணனைப் போல் தூங்கினாயே என்று பார்த்தேன்...."

"வீட்டுக் கதவு திறந்த சத்தம் கேட்டு விழித்துக் கொண்டேன். நீ விடு விடு என்று நடந்து வந்து விட்டாய்! திரும்பியே பார்க்கவில்லை. அம்மம்மா! உன்னைத் தொடர்ந்து ஓடி வருவது எவ்வளவு கஷ்டமாய்ப் போய் விட்டது?"

"எதற்காகத் தொடர்ந்துவந்தாய்?"

"நல்ல கேள்வி! நீதானே வரச் சொன்னாய்? மறந்து விட்டாயா?"

"எதற்காக வரச் சொன்னேன்? உனக்கு நினைவு இருக்கிறதா?"

"நினைவு இல்லாமல் என்ன? உன் காதலர்களைக் காட்டுவதாகச் சொன்னாய்! எங்கே உன் காதலர்கள்? காட்டு. பார்க்கலாம்!"

"அதோ உனக்குப் பின்னால் திரும்பிப் பார்!" என்றாள் பூங்குழலி.

## ஐந்தாம் அத்தியாயம்

# நடுக் கடலில்

**வ**ந்தியத்தேவன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய வயிற்றிலிருந்து குடல்கள் மேலெழும்பி அவன் மார்பை அடைத்தன. பிறகு, இன்னும் மேலே கிளம்பி அவன் தொண்டையையும் அடைத்துக் கொண்டன.

அவனுடைய தேகத்தில் ஆயிரம் மின்னல்கள் பாய்ந்தன. பழுக்கக் காய்ந்த ஒரு லட்சம் ஊசி முனைகள் அவன் தேகமெல்லாம் துளைத்தன. — அத்தகைய பயங்கரக் காட்சி அவன் கண் முன்னே காணப்பட்டது.

மூடியில்லாது பரந்திருந்த இருளில் அங்கங்கே பத்து, இருபது, நூறு அக்கினி குண்டங்கள் தோன்றின. அவற்றிலிருந்து புகை இல்லை; வெளிச்சமும் இல்லை. கீழே விறகு போட்டு எரித்து உண்டாகும் தீப் பிழம்புகளும் அல்ல. வெறும் நெருப்புப் பிண்டங்கள். பூமியிலிருந்து எப்படியோ எழுந்து அவை நின்றன. திடீரென்று அவற்றில் சில பிண்டங்கள் மறைந்தன. வேறு சில தீப்பிண்டங்கள் புதிதாக எழுந்து நின்றன.

ஒரு பிரம்மாண்டமான கரிய இருள் நிறங்கொண்ட ராட்சதன். தனியாகத் தலை ஒன்று இல்லாமல் வயிற்றிலேயே வாய் கொண்ட கபந்தனைப் போன்ற ராட்சதன். ஆனால் அவன் வயிற்றில் ஒரு வாய் அல்ல; அநேக வாய்கள். அந்த வாய்களை அவன் அடிக்கடி திறந்து மூடினான். திறக்கும்போது வயிற்றிலிருந்து தீயின் ஜுவாலை வாய்களின் வழியாக வெளியே வந்தது. மூடும்போது மறைந்தது.

இந்தக் காட்சியைக் கண்ட வந்தியத்தேவனுடைய ஒவ்வொரு ரோமக்கால் வழியாகவும் அவனுடைய உடம்பின் ரத்தம் கசிவது போலிருந்தது. அப்படிப்பட்ட பீதி அவனை என்றைக்கும் ஆட்கொண்டதில்லை. பெரிய பழுவேட்டரையரின் பாதாள நிலவறையிலே கூட இல்லை.

அவன் பின்னால் ''ஹா ஹாஹா !'' என்று ஒரு சிரிப்புக் கேட்டது. திரும்பிப் பார்த்தான்.

பூங்குழலிதான்! வேறு ஒரு சந்தர்ப்பத்திலே யென்றால், அவனுடைய அந்தச் சிரிப்பே அவனுக்கு அளவில்லாத பயங்கரத்தை உண்டாக்கி யிருக்கும். இப்போது அதே சிரிப்பு தைரியத்தை அளித்தது. இரத்தமும் சதையும் உடலும் உயிரும் உள்ள பெண் ஒருத்தி அவன் பக்கத்திலே நிற்கிறாள் என்பது பெரும் அபாயத்தில் ஒரு பற்றுக்கோல் போல உதவியது.

''பார்த்தாயா என் காதலர்களை?'' என்று பூங்குழலி கேட்டாள்.

''இந்தக் கொள்ளிவாய்ப் பிசாசுகள் தான் என் காதலர்கள். இவர்களைப் பார்த்துச் சல்லாபம் செய்வதற்குத் தான் நள்ளிரவில் இந்த இடத்துக்கு நான் வருகிறேன்'' என்றாள்.

இந்தப் பெண்ணுக்கு நன்றாகப் பித்துப் பிடித்திருக்கிறது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இவளுடைய உதவியைக் கொண்டு இலங்கைக்குப் போகிறது நடக்கிற காரியமா? இவ்வாறு வந்தியத்தேவன் எண்ணினான். அவனுடைய உள் மனத்திலிருந்து வேறு ஏதோ ஒரு எண்ணம் வெளிவரப் போராடிக் கொண்டிருந்தது. அது என்ன? அது என்ன? இந்தக் கொள்ளி வாய்ப் பிசாசுகளைப் பற்றிய ஏதோ ஒரு விஷயந்தான்.

''உன்னுடைய சிநேகிதன் சேந்தன் அமுதனால் இத்தகைய காதலர்களோடு போட்டியிட முடியுமா?'' என்று பூங்குழலி கூறியது கிணற்றுக்குள்ளேயிருந்து வரும் குரலைப் போல் கேட்டது. ஏனெனில் அவனுடைய உள்ளம் அப்போது எதையோ ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்று கொண்டிருந்தது. ஆ! கடைசியில் ஒரு பெரிய போராட்டம்; மனத்துக்குள்ளேதான். இதோ ஞாபகம் வந்துவிட்டது.....

கந்தகம் கலந்த பூமிப் பிரதேசங்களில் தண்ணீர் வெகு காலம் தேங்கி நின்று சதுப்பு நிலமானால், அத்தகைய இடங்களில் இரவில் இம்மாதிரி தோற்றங்கள் ஏற்படும். பூமிக்குள்ளேயிருந்து கந்தகம் கலந்த வாயு வெளியில் வரும்போது நெருப்புப் பிழம்பு வருவது போலிருக்கும். சில சமயம் நீடித்து நிற்கும். சில சமயம் குப் குப் என்று தோன்றி மறையும். இந்த இயற்கைத் தோற்றத்தைக் கண்டு அறியாத மக்கள் பயப்படுவார்கள். கொள்ளி வாய்ப் பிசாசு என்று பயங்கரப் பெயர் கொடுத்துப் பீதி அடைவார்கள்.

இப்படிப் பெரியோர் சொல்லி அவன் கேள்விப்பட்டிருந்தது ஞாபகத்துக்கு வந்தது. பிறகு அவனுடைய அறிவுக்கும் பயத்துக்கும் போர் நடந்தது. அறிவு வெற்றி பெற்றது.



ஆனால் அதையெல்லாம் இச்சமயம் இந்தப் பிரமை பிடித்த பெண்ணிடம் சொல்லிப் பயனில்லை. எப்படியாவது அவளுக்கு நல்ல வார்த்தை சொல்லி அழைத்துக் கொண்டு போய்விட வேண்டியதுதான்.

''பெண்ணே! உன் காதலர்கள் எங்கும் போய்விட மாட்டார்கள். இங்கே தான் இருப்பார்கள். நாளைக்கும் அவர்களை வந்து பார்க்கலாம் அல்லவா ? வீட்டுக்குப் போகலாம், வா!'' என்றான்.

அதற்குப் பூங்குழலி மறு மொழி ஒன்றும் சொல்லவில்லை; விம்மி அழத் தொடங்கினாள்.

இது என்ன தொல்லை என்று வந்தியத்தேவன் எண்ணினான். பின்னர் சற்று நேரம் சும்மா இருந்தான்.

''பெண்ணே ! நான் போகலாமா?'' என்று மீண்டும் கேட்டான்.

விம்மல் நிற்கவில்லை.

வந்தியத் தேவனுக்கு அலுத்துப் போய் விட்டது.

'' சரி; உன் இஷ்டம் போல் செய்! எனக்குத் தூக்கம் வருகிறது. நான் போகிறேன்'' என்று சொல்லிவிட்டு இறங்கத் தொடங்கினான்.

பூங்குழலி உடனே விம்மலை நிறுத்தினாள். மேட்டிலிருந்து இறங்கத் தொடங்கினாள். நாலே பாய்ச்சலில் வந்தியத்தேவனுக்கு முன்னால் கீழே போய் நின்றாள்.

வந்தியத்தேவன் ஓடிப் போய் அவளைப் பிடித்தான்.

இருவரும் கலங்கரை விளக்கை நோக்கி நடக்கத் தொடங்கினார்கள்.

இந்தப் பித்துப் பிடித்த பெண்ணை நம்பிப் படகில் ஏறுவதாவது? கடலைக் கடப்பதாவது? — ஆயினும் வேறு வழி இல்லையென்று தெரிகிறதே? ஏதாவது நல்ல வார்த்தை சொல்லிச் சிநேகம் செய்து கொள்ளப் பார்க்கலாமா ?

''வானத்தில் வால் நட்சத்திரம் தோன்றுகிறதே! அதைப் பற்றி உன் கருத்து என்ன?'' என்று பூங்குழலி கேட்டாள்.

''என் கருத்து ஒன்றுமில்லை. வால் நட்சத்திரம் தோன்றுகிறது; அவ்வளவுதான் !'' என்றான் வந்தியத்தேவன்.

''வால் நட்சத்திரம் வானில் தோன்றினால் பூமியில் பெரிய கேடுகள் விளையும் என்று சொல்கிறார்களே?''

''அப்படித்தான் சிலர் சொல்லுகிறார்கள்.''

''நீ என்ன சொல்லுகிறாய் ?''

''நான் ஜோதிட சாஸ்திரம் படித்தது இல்லை. ஜனங்கள் அப்படிச் சொல்லிக் கொள்வதுதான் எனக்குத் தெரியும்.''

சற்று நேரம் மௌனமாக நடந்தார்கள். பிறகு பூங்குழலி, ''சக்கரவர்த்திக்கு உடம்பு சுகமில்லை என்று சொல்கிறார்களே ? அது உண்மைதானே ?'' என்றாள்.

இவள் அவ்வளவு பித்துக்குளிப் பெண் அல்ல என்று வந்தியத்தேவன் எண்ணிக் கொண்டான். கொஞ்சம் அவனுக்கு நம்பிக்கை பிறந்தது.

''நானே என் கண்ணால் பார்த்தேன். சக்கரவர்த்தி படுத்த படுக்கையாய்க் கிடக்கிறார். இரண்டு கால்களிலும் உணர்ச்சியே கிடையாது. ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாது. அவரைக் குணப்படுத்த மூலிகை கொண்டு வரத்தானே நான் வந்திருக்கிறேன். பெண்ணே! எனக்கு நீ ஓர் உதவி செய்வாயா?'' என்று கேட்டான்.

அதற்கு மறுமொழி சொல்லாமல், ''சக்கரவர்த்தி அதிக நாள் உயிரோடிருக்கமாட்டார், சீக்கிரத்தில் இறந்து போய் விடுவார் என்று சொல்கிறார்களே, அது உண்மையா ?'' என்று கேட்டாள் பூங்குழலி.

''நீ இச்சமயம் உதவி செய்யாவிட்டால் அப்படி நடந்தாலும் நடந்துவிடும். இலங்கையில் ஓர் அபூர்வ சஞ்சீவி மூலிகை இருக்கிறதாம். அதைக் கொண்டு வந்தால் சக்கரவர்த்தி பிழைத்துக் கொள்வாராம். நீ படகு தள்ளிக் கொண்டு இலங்கைக்கு வருவாயா?''

''சக்கரவர்த்தி ஒரு வேளை இறந்து போனால் அடுத்தபடி யார் பட்டத்துக்கு வருவார்கள்?'' என்று பூங்குழலி கேட்டது வந்தியத்தேவனைத் தூக்கி வாரிப் போட்டது.

''பெண்ணே ! உனக்கும் எனக்கும் அதைப் பற்றி என்ன? யார் பட்டத்துக்கு வந்தால் நமக்கு என்ன கவலை?''

''ஏன் கவலை இல்லை? நீயும் நானும் இந்த இராஜ்யத்தின் பிரஜைகள் அல்லவா ?''

இந்தப் பெண் பித்துப் பிடித்தவளே அல்ல. இவளிடம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். இவளுடைய விசித்திரமான செயல்களுக்கு வேறு காரணம் இருக்க வேண்டும்.

''ஏன் பேசாமலிருக்கிறாய்? அடுத்த பட்டத்துக்கு யார் வருவார்கள் ?'' என்று பூங்குழலி மீண்டும் கேட்டாள்.

''ஆதித்த கரிகாலருக்குத்தானே யுவராஜா பட்டம் கட்டியிருக்கிறது. அவர்தான் நியாயமாக அடுத்த பட்டத்துக்கு வர வேண்டும்.''

''மதுராந்தகர், — அவருக்கு உரிமை ஒன்றுமில்லையா ?''

''அவர்தான் இராஜ்யம் வேண்டாம் என்று சொல்லி விட்டாரே ?''

# சிங்கார்
## குங்குமம்




உங்கள் மேனி வண்ணத்திற்கும், சேலைக் கலர்களுக்கும் இசைவான பல நிறச்சாயல்களில் கிடைக்கும் சிங்கார் குங்கும், உங்கள் எழிலுக்கு எழில் கூட்டி முகத்திற்குப் பொலிவைத் தருகிறது.

அது எடுப்பான ப்ளாஸ்டிக் குப்பி களில் அல்லது ட்யூபுகளில் கிடைக்கிறது.




Bottle design Registered
Patent No: 128338

**PIPIS PRODUCTS**

விசாரணைகளுக்கு எழுதவும்: பாரமவுண்ட் பிராடக்ட்ஸ்

A - 30 - ஸ்ரீ ராம் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், G. D. அம்பேத்கார் ரோடு, பம்பாய் - 31 DD.

# இதோ
# ஆல்விமில்க்

## வைட்டமின்கள் நிறைந்த உணவு பானம்

ஆரோக்கியம் அதிகரிக்கச் செய்யும் வைட்டமின்கள், ஆடைச்சத்து நிறைந்த பால், பார்லிமால்ட், கோதுமை மாவு மற்றும் மால்ட்கள் செறிந்த உணவு பானம் இது. ருசி மிகுந்தது. எளிதில் ஜீரணமாவது. எல்லா வயதினருக்கும் டாக்டர்கள் ஆல்விமில்க்கை சிபாரிசு செய்கின்றனர். நோயுற்றிருக்கும் பொழுதும், நோய் குணமாகி உடல் தேறுவதற்கும் சிறந்த முறையில் உதவுவது. கர்ப்ப ஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்குப் பாலூட்டும் தாய்மார்களுக்கும் ஏற்ற பானம். இன்றே ஆல்விமில்க் கேட்டு வாங்குங்கள், வேறு எந்த உணவு பானத்தையும் விட இதை மிகவும் விரும்புவீர்கள்.




*தயாரிப்பவர்கள்:*

**ஆல்விடோன் லாபாரடரீஸ்**

மதராஸ்-43.



குடியரசு தினத்தன்று விருது பெற்ற வித்தகர்களில் சிலர்.

**பத்மபூஷண்:**

கேசவ் பிரசாத் கோயங்கா
(தொழிலதிபர்)

கஸ்தூர்பாய் லால்பாய்
(தொழிலதிபர்)

**பத்மஸ்ரீ:**

டி. முத்தையன்
(தொழில் நுணுக்கக் கல்வி இயக்குநர்)

பால்ராஜ் சஹானி
(திரைப்பட நடிகர்)

ராஜம் ராமசாமி
(பொதுநலச்சேவை)











---

''முன்னே அப்படிச் சொன்னார்; இப்போது இராஜ்யம் வேண்டும் என்று சொல்கிறாராமே?''

''அவர் சொன்னால் போதுமா? பிரஜைகள் எல்லாரும் ஒப்புக் கொள்ள வேண்டாமா?''

''பெரிய மனிதர்கள் பலர் அவர் கட்சியில் இருக்கிறார்களாமே?''

''அப்படித்தான் நானும் கேள்விப் பட்டேன். இவ்வளவும் உன் காது வரையில் வந்து எட்டியிருப்பதை நினைத்தால் எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது.''

''சுந்தர சோழர் திடீரென்று இறந்து போனால் என்னவாகும்?''

''தேசமெல்லாம் பெருங் குழப்பம் ஆகி விடும். அதைத் தடுப்பதற்குத் தான் உன் உதவி இப்போது தேவையாயிருக்கிறது......''

''நான் என்ன உதவியைச் செய்ய முடியும்?''

''முன்னமேயே சொன்னேனே? தான் அவசரமாக மூலிகை கொண்டு வர இலங்கைத் தீவுக்குப் போக வேண்டும். அதற்கு நீ படகு வலித்துக் கொண்டு வர வேண்டும்.''

''என்னை எதற்காக அழைக்கிறாய்? ஒரு பெண் பிள்ளையைப் படகு தள்ளும்படி கேட்க வெட்கமாயில்லையா!''

''வேறு யாரும் இல்லை என்று உன் தந்தை சொல்கிறார். உன் அண்ணன் கூட நேற்றுப் போய் விட்டானாமே?''

''அவன் போனால் என்ன? உனக்கு இரண்டு கைகள், உன்னோடு வந்தவனுக்கு இரண்டு கைகள் இல்லையா?''

''எங்களுக்குப் படகு வலிக்கத் தெரியாது....''

''படகு வலிப்பது என்ன மந்திர வித்தையா! துடுப்பைப் பிடித்து வலித்தால் தானே படகு போகிறது!''

''திசை தெரிய வேண்டும் அல்லவா? நடுக்கடலில் திசை தெரியாமல் போய் விட்டால்....?''

''நடுக் கடலில் திசை தெரியாவிட்டால் முழுகிச் சாகுங்கள்! அதற்கு நான் என்ன செய்யட்டும்?''

கலங்கரை விளக்கின் அருகில் அவர்கள் வந்துவிட்டார்கள். வந்தியத்



## திடுதிப்!

'திடுதிப்' விளம்பரங்கள் என்ற தலைப்பில் சென்ற இதழ் கல்கியில் ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. தங்கள் தயாரிப்புக்களை விளம்பரம் செய்ய விரும்புவோர் அதற்கென குட்டிபிலிம்களை எடுப்பதைவிடத் திரைப்படத்திலேயே விளம்பரத்தை இணைத்து விடலாமே என்று ஒரு யோசனை அதில் கூறப்பட்டிருந்தது. 'விளம்பரத்துக்கு ஏற்பத் திரைக்கதையை அமைத்துக் கொண்டால் போகிறது' என்று வேடிக்கையாக எழுதப்பட்ட கட்டுரை அது.

ஆனால் நமது படாதிபதிகளோ எள் என்பதற்கு முன்னால் எண்ணெயாக நிற்கிறார்கள்! "ஏக் ஸ்ரீமான் ஏக் ஸ்ரீமதி" என்ற தலைப்பில் அழகுப் போட்டிகளை ஆதாரமாக வைத்துக் கதை எழுதி ஒரு ஹிந்திப் படம் தயாரித்திருக்கிறார்கள். அதில் எடுத்த எடுப்பிலேயே கதாநாயகி, அழகு சாதனத் தயாரிப்பாளர்களான லாக்மே நிறுவனத்தார் ஏற்பாடு செய்யும் அழகுப் போட்டியில் கலந்து கொள்வதாக ஒரு காட்சி! லாக்மே நிறுவனத்தார் ஏற்பாடு செய்த அழகுப் போட்டியில் பங்கு பெறும்போது லாக்மே நிறுவனத்தின் அழகு சாதனத் தயாரிப்புக்களைத்தானே கதாநாயகி பயன்படுத்த வேண்டும்! எப்படி இந்தத் திடுதிப் விளம்பரம்! நமது படாதிபதிகளுக்குச் சொல்லியா தர வேண்டும்?

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

தேவனும் அத்துடன் அந்தப் பேச்சை நிறுத்திவிட விரும்பினான். மேலும் பேச்சை வளர்த்திப் பூங்குழலியின் மறுப்பை உறுதிப்படுத்திவிட அவன் விரும்பவில்லை. அவள் அவ்வளவு கண்டிப்பாக மறுமொழி சொன்ன போதிலும், அவளுடைய குரலும் பேச்சின் தோரணையும் அவனுடைய உள்ளத்தில் சிறியதொரு நம்பிக்கைச் சுடரை உண்டாக்கியிருந்தன.

*   *   *

இரண்டாம் முறை படுத்த பிறகு வெகு நேரம் வந்தியத்தேவனுக்குத் தூக்கம் வரவில்லை. ஏதேதோ எண்ணங்களினால் அவனுடைய உள்ளம் வெகுவாகக் குழம்பிக் கொண்டிருந்தது. நாலாம் ஜாமத்தின் ஆரம்பத்திலேதான் தூங்கினான்.

தூக்கத்தில் வந்தியத்தேவன் கனவு கண்டான். பாய்மரம் விரித்த சிறிய படகில் பூங்குழலியும் அவனும் எதிரெதிராக அமர்ந்திருந்தார்கள். நாலாபுறமும் கடல்; எங்கு நோக்கினாலும் ஜலம். இனிய பூங்காற்று. படகு அக் காற்றில் மிதப்பது போலப் போய்க் கொண்டிருந்தது. பூங்குழலியின் முகம் அழகே வடிவமாகப் பொலிந்தது. சுருண்ட மயிர் நெற்றியில் ஊசலாடிக் கொண்டிருந்தது. சேலைத் தலைப்புப் பறந்தது. எங்கே போகிறோம், எதற்காகப் போகிறோம் என்பதெல்லாம் வந்தியத் தேவனுக்கு மறந்து போய் விட்டது. பூங்குழலியுடன் படகில் போவதற்காகவே இத்தனை நாள் பிரயாணம் செய்து வந்ததாகத் தோன்றியது. ஒன்றே ஒன்று குறைவாயிருந்தது. அது என்ன? அது என்ன? ஆ! பூங்குழலியின் பாட்டு! சேந்தன் அமுதன் சொல்லியிருந்தான் அல்லவா?

''பெண்ணே! உன் பவழ வாயைத் திறந்து ஒரு பாட்டுப் பாடமாட்டாயா?'' என்றான் வந்தியத்தேவன்.

''என்ன சொன்னாய்?'' என்று பூங்குழலி புன்னகையுடன் கேட்டாள். ஆகா! அந்தப் புன்னகை ஏழு உலகமும் பெறாதா?

''உன் கனிவாயைத் திறந்து ஒரு கீதம் இசைக்க மாட்டாயா என்றேன்.''

''கீதம் இசைத்தால் எனக்கு என்ன தருவாய்?''

''உன் அருகில் வந்து உன் அழகிய கன்னத்தில்....''

பூங்குழலி உடனே தன் மடியிலிருந்து ஒரு கூரிய கத்தியை எடுத்துக் கொண்டாள். கத்தி பிடித்த கையை ஓங்கினாள்.

''இதோ பார்! அந்தப் பாய்மரத்துக்கு இப்பால் ஒரு அணுவளவு நீ வந்தாலும் உன்னை இந்தக் கத்தியால் குத்தி விடுவேன். கடல் மீன்கள் மிக்க பசியோடிருக்கின்றன!'' என்றாள்.

**(தொடரும்)**



# மறைந்த • தலைவருக்கு • மரியாதை •

தமது பண்பாலும் பேச்சாலும் மக்களின் உள்ளங் கவர்ந்த அறிஞர் அண்ணாவின் மறைவுக்கு அஞ்சலி செலுத்துவதற்காகச் சென்னை கடற்கரையில் நகர ஷெரீப் கந்தர்லால் நஹாதா பெரும் இரங்கற் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். பல்வேறு தலைவர்கள் மறைந்த தலைவருக்கு இறுதி மரியாதை செலுத்தினர். ராஜாஜி அவர்கள் இந்தக் கூட்டத்தில்மனம் நெகிழ்ந்து பேசுவதை இங்கு காணலாம். பாரதப் பிரதமர் இந்திரா காந்தி, ஸ்ரீமதி ராணி அண்ணாதுரையின் இல்லத்துக்குச் சென்று தேறுதல் வார்த்தைகள் கூறியதோடு, அண்ணா அவர்களின் சமாதிக்குச் சென்று மலர் வளையம் வைத்து மரியாதை செலுத்தினார்.

மாலையில் நடைபெற்ற இரங்கற் கூட்டத்திலும் பாரதப் பிரதமர் கலந்து கொண்டு பேசினார். கடற்கரை நிரம்பி வழிய மக்கள் திரளாகக் குழுமியிருந்தனர்.

படங்கள் : அண்ணாமலை





# மகாபாரதம்

## ராஜாஜி

மறுபடியும் கிருஷ்ணன், "கௌரவப் படையுடன் போர் புரிந்து களைத்துப் போயிருக்கும் சாத்யகியைப் பூரிசிரவசு யுத்தத்துக்கு அழைத்தான். இது சமமான யுத்தமல்ல. இவனுக்கு உடனே துணை போக வேண்டும். இல்லாவிடில் நம்முடைய அருமை யுயுதானன் பூரிசிரவசால் கொல்லப்படுவான்" என்றான்.

இவ்வாறு கிருஷ்ணன் சொல்லி முடிப்பதற்குள், பூரிசிரவசு சாத்யகியைத் தூக்கிக் கீழே போட்டு அடித்தான். "செத்தான் யுயுதானன்!" என்று கௌரவ சேனை ஆரவாரித்தது.

"விருஷ்ணி குலத்திலேயே சிறந்தோங்கி விளங்கிய வீரனை சாத்யகி பூமியில் கிடப்பதைப் பார். உனக்குத் துணை செய்ய வந்தவன் உன் எதிரில் வதம் செய்யப்படுகிறான். நீ பார்த்துக் கொண்டிருக்கையிலே உன் நண்பன் உயிர் இழக்கப் போகிறான்" என்று கிருஷ்ணன் மறுபடியும் அருச்சுனனுக்குச் சொன்னான். சிங்கம் யானையை இழுப்பது போல் யுத்தகளத்தில் விழுந்த சாத்யகியைப் பூரிசிரவசு தரதரவென்று இழுத்தான்.

அருச்சுனன் தருமசங்கடத்தில் சிக்கிக் கலக்கமடைந்தான்.

"பூரிசிரவசு என்னால் எதிர்க்கப்படவில்லை. வேறொருவனோடு எதிர்த்துப் போர் செய்து கொண்டிருக்கிற பூரிசிரவசு மேல் அம்பு விட்டுக் கொல்ல என் மனம் துணியவில்லை. என் நிமித்தமாக சாத்யகி உயிர் இழப்பதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கவும் முடியவில்லை."

இவ்வாறு அருச்சுனன் கண்ணனுக்குச் சொல்லி முடிக்கும் தறுவாயில், அவன் மேல் ஸைந்தவன் தொடுத்து வீசிய அம்புத் திரள் வந்து வானை மூடிற்று. அவனும் ஜயத்ரதன் மேல் அம்புமாரி பெய்து கொண்டிருந்தான். அதே சமயம் சாத்யகியின் சங்கட நிலையை அடிக்கடி திரும்பிப் பார்த்து மன வேதனைப்பட்டுக் கொண்டிருந்தான்.

"பார்த்தனே! அநேக வீரர்களுடன் போர் புரிந்து விட்டுச் சாத்யகி மிகவும் களைப்படைந்து ஆயுதங்களை இழந்து பூரிசிரவசின் கையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான்" என்றான் மறுபடியும் கண்ணன்.

அருச்சுனன் இந்தச் சமயம் திரும்பிப் பார்த்த போது பூரிசிரவசு கீழே கிடந்த சாத்யகியைக் காலால் மிதித்துக் கொண்டு கத்தியுடன் கூடிய கையை உயரத் தூக்கி நின்றான். அதைக் கண்டதும் பார்த்தன் ஓர் அம்பு விடுத்தான். அது பூரிசிரவசின் கையை நோக்கிப் பாய்ந்தது. உயரத் தூக்கின வலக் கை அறுபட்டுப் பிடித்திருந்த கத்தியுடன் கீழே விழுந்தது.

கை வெட்டப்பட்ட பூரிசிரவசு திரும்பிப் பார்த்தான். "கௌந்தேயனே! வீரனுக்குத் தகாத காரியத்தை நீ செய்வாய் என்று நான் எதிர்பார்த்திருக்கவில்லை. உன்னைப் பாராமல் வேறொருவருடன் போர் புரிந்து கொண்டிருக்கிற என்னுடைய கையை மறைவாக இருந்து வெட்டினாய். ஹா! மனிதன் யாரிடம் கூடிப் பழகுகிறானோ அவனுடைய குணத்தைச் சீக்கிரத்தில் அடைகிறான் என்கிற உண்மையை உன்னுடைய செய்கையில் கண்டேன்! தனஞ்சய! உன் அண்ணன் தருமபுத்திரனிடம் சென்று பூரிசிரவசு என்ன செய்து கொண்டிருக்கும் போது கையை வெட்டினதாகச் சொல்லப் போகிறாய்? இந்தத் தகாத யுத்த முறையை உனக்கு யார் உபதேசித்தது? தகப்பன் இந்திரனா, ஆசார்யர்கள் துரோணரா, கிருபரா! உன்னுடன் யுத்தம் செய்யாதவனும் உன்னைப் பாராதவனுமான ஒருவனை எந்தத் தருமத்தை அனுசரித்து அடித்தாய்? இழிவானவர்கள் செய்யக் கூடிய காரியத்தைச் செய்தாய். உன் புகழுக்குப் பெரும் குறை உண்டாக்கிக் கொண்டாய்! நீயாக இந்த அதருமத்தில் இறங்கியிருக்க மாட்டாய். கிருஷ்ணனுடைய பிரேரணையின் மேல் தான் நீ இவ்வாறு செய்திருக்க வேண்டும். இது உன் இயல்புக்குப் பொருந்தாத செய்கை. வேறொரு விஷயத்தைக் கவனித்துக் கொண்டு அஜாக்கிரதையாக இருப்பவனை அரச குலத்தில் பிறந்த ஒருவன் தாக்கமாட்டான். இகழத் தக்கவனை கிருஷ்ணனுடைய உபதேசத்தைக் கேட்டு இந்த அதருமத்தைச் செய்து விட்டாய்."

இவ்வாறு வலக்கை இழந்த பூரிசிரவசு யுத்த களத்தில் கண்ணனையும் அருச்சுனனையும் நிந்தித்தான்.

பார்த்தன், "பூரிசிரவசே! முதுமையால் புத்தியை இழந்தாய் போலும். யுத்த முறைகளை முற்றிலும் அறிந்தவனாகிய நீ, ஏன் வீணாக என்னையும்

ரிஷிகேசனையும் நிந்திக்கிறாய்? எனக்காகப் பிராணனை விடத் துணிந்து வந்து யுத்தம் செய்கிற நண்பனை, எனக்கு வலக்கை போன்ற யுயுதானனை, அவன் செய்கையற்றுக் கீழே கிடக்கும் போது நீ வதம் செய்வதை நான் எப்படிச் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியும்? இருந்தேனானால் நான் நரகத்தை அடைவேன். மாதவனுடன் சேர்ந்து நான் கெட்டுப் போனேனா? அப்படிக் கெட்டுப் போக உலகத்தில் எவன்தான் விரும்பமாட்டான்? புத்தி மயக்கத்தினால் இப்படிப் பேசுகிறாய். அநேக மகாரதர்களுடன் போர் செய்து களைப்புற்று ஆயுதங்கள் குறைந்து வந்திருந்த சாத்யகியை நீ யுத்தத்துக்கு அழைத்து ஜெயம் பெற்றாய். அவ்வாறு ஜெயிக்கப்பட்டுக் கீழே கிடந்தவனை நீ எந்தத் தருமத்தின்படி கொல்லப் போனாய்? ஆயுதத்தை இழந்தவனும் கவசம் உடைந்தவனும் களைப்புற்றுத் தடுமாறி நின்றவனுமான பாலன் அபிமன்யுவின் வதத்தை நீங்கள் எவ்வாறு கொண்டாடினீர்கள்?'' என்றான்.

இவ்வாறு அருச்சுனன் மறுமொழி சொன்னபின் பூரிசிரவசு சாத்யகியை விட்டு விலகி யுத்தகளத்தில் இடக் கையினால் அம்புகளைக் கீழே பரப்பி யோகாசனத்தில் அமர்ந்து பிரமத்தை தியானித்துப் பிராயோபவேச நிலையில் அமர்ந்தான். கௌரவ சேனை முழுவதும் பூரிசிரவசைப் புகழ்ந்து அரவாரித்தது. அருச்சுனனையும் கிருஷ்ணனையும் இகழ்ந்தது.

''வீரர்களே! என்னுடைய பாணங்கள் செல்லும் தூரத்தில் என்னைச் சேர்ந்த வீரனை எந்தப் பகைவனும் கொல்லவிடமாட்டேன் என்பது என்னுடைய விரதம். ஏன் என்னை நிந்திக்கிறீர்கள்? தருமத்தை அறியாமல் நிந்தித்தல் தகாது. சாத்யகியைக் காப்பாற்ற வேண்டியது என்னுடைய தருமம்'' என்று சொல்லிஅருச்சுனன் பூரிசிரவசுவைப் பார்த்து,



''அடுத்தவர்களுக்கு அபயம் கொடுத்தவனும் புருஷ ஸ்ரேஷ்டனுமான வீரனே! தவறான செய்கையினால் இந்த நிலைமையை நீ அடைந்தாய். எவனை நிந்திப்பதில் பயன் இல்லை. இதற்கெல்லாம் காரணமான க்ஷத்திரிய தருமத்தை நாம் அனைவரும் நிந்திக்க வேண்டும்'' என்றான்.

அருச்சுனன் சொன்னதைக் கேட்ட பூரிசிரவசு ஒன்றும் பேசாமல் மௌனமாய் வணங்கித் தலையால் பூமியைத் தொட்டான்.

ஒரு முகூர்த்த காலம் இளைப்பாறிய சாத்யகி எழுந்து கோபத்துக்கு வசப்பட்டவனைக் கத்தியை எடுத்துக் கொண்டு யோகத்தில் அமர்ந்திருந்த பூரிசிரவசை அடுத்தான். சேனை முழுவதும், ''ஹா ஹா!'' என்று கூக்குரலிட்டுக் கொண்டும், கிருஷ்ணனும் அருச்சுனனும் ''வேண்டாம்'' என்று தடுத்துக் கொண்டும் இருக்க சாத்யகி கத்தியை வீசிப் பூரிசிரவசின் தலையை அறுத்துக் கீழே தள்ளினான்.

சேனையிலுள்ளவர்கள் அனைவரும் சாத்யகி செய்தது இகழத்தக்க காரியம் என்று சொல்லி வெறுப்பும் துக்கமும் கொண்டு நிந்தித்தார்கள்.

''யுத்தரங்கத்தில் உயிரோடு விழுந்திருக்கும் என்னைக் காலால் மிதித்துக் கொல்ல யத்தனித்த குல சத்துருவை அவன் எந்த விரதத்தில் இருந்தாலும் நான் கொல்லத் தகுந்தவன்'' என்று சாத்யகி சொன்னான். ஆயினும், யாருமே யுத்தகளத்தில் பூரிசிரவசின் வதத்தைச் சரி என்று ஒப்புக் கொள்ளவில்லை. சித்தர்களும் தேவர்களும் பூரிசிரவசைக் கொண்டாடினார்கள்.

பாரதத்தில் அமைக்கப்பட்டிருக்கும் தரும சங்கடச் சிக்கல் கதைகளில் பூரிசிரவசின் வதமும் ஒன்று. துவேஷமும் கோபமும் வளர்ந்துவிட்டபின் ஒழுங்கேது? தருமமேது?

# 90. ஜயத்ரதன் வதம்

''கர்ணா! இரண்டில் ஒன்று முடிவாகும் சமயம் இப்போது நேர்ந்திருக்கிறது'' என்றான் துரியோதனன். ''இன்று மாலைக்குள் ஜயத்ரத வதப் பிரதிக்ஞை நிறைவேறாமற் போனால் அர்ச்சுனன் வெட்கத்தால் தன் உயிரை மாய்த்துக் கொள்வான். அருச்சுனன் இறந்தால் பாண்டவர்களின் நாசம் நிச்சயம். அதன் பின் இந்தப் பூமி முழுவதும் சத்ருக்கள் தொந்தரவின்றி நம் வசத்திலிருக்கும். புத்தி மயக்கத்தினால் தன்னுடைய விநாசத்துக்காகவே தனஞ்சயன் இந்த வீண் பிரதிக்ஞையை எடுத்துக் கொண்டான். இது என்னுடைய நல்ல காலம் என்றே நினைக்கிறேன். இதைக் கைவிடலாகாது. எப்படியாவது அவனுடைய சபதம் நிறைவேறாமல் செய்ய வேண்டும். இன்று நீ உன் சாமர்த்தியத்தைக் காண்பிக்க வேண்டும். அதோ சூரியன் சாய்ந்து விட்டான். மிஞ்சியிருக்கும் காலத்துக்குள் பார்த்தன் ஜயத்ரதனை அடைய முடியாது. நானும் அசுவத்தாமரும், சல்லியனும், கிருபரும் நீயும் அஸ்தமனம் ஆகும்வரையில் எவ்விதத்திலாவது ஜயத்ரதனைக் காப்பாற்றித் தனஞ்சயனுடைய பிரதிக்ஞை நிறைவேறாமல் செய்துவிட வேண்டும்'' என்றான்.

இதைக்கேட்ட கர்ணன், ''அரசனே, பீமசேனனால் பலமாக அடிக்கப்பட்டு உடம்பு முழுவதும் காயமடைந்திருக்கிறேன். என் உடலின் லாகவம் மிகவும் குறைந்து போயிருக்கிறது. ஆயினும் என்னால் இயன்றவரையில் உன்னுடைய காரியத்தை நிறைவேற்றுவேன். நான் பிழைத்திருப்பது உனக்காகவே'' என்றான்.

இவ்வாறு யுத்த களத்தில் துரியோதனனும் கர்ணனும் பேசிக் கொண்டிருக்கும்போது அருச்சுனன் கௌரவ சேனையைப் பலமாகத் தாக்கிக்கொண்டிருந்தான். எப்படியாவது கௌரவ சேனையை உடைத்து அஸ்தமனத்துக்குள் ஜயத்ரதனை அடைய வேண்டும் என்று தனஞ்சயன் கடும் போர் புரிந்தான்.

கிருஷ்ணன் பாஞ்சஜன்யத்தை எடுத்து ரிஷப சுவரத்தில் பேரொலி செய்தான். அதைக் கேட்டதும் திட்டம் செய்திருந்தபடி கிருஷ்ணனுடைய சாரதி தாருகன் தயாரித்து வைத்திருந்த தேரை மாய வேகமாக ஓட்டிக் கொண்டு வந்து சேர்ந்தான். அதில் சாத்யகி ஏறி, கர்ணனை எதிர்த்து மிகவும் சாமர்த்தியமான போர் நடத்தினான்.

தாருகனுடைய சாரத்யமும் சாத்யகியினுடைய வில் வலிமையும் சேர்ந்து, தேவர்கள் நின்று பார்க்கும்படியான யுத்தம் தொடங்கிற்று. கர்ணனுடைய நான்கு குதிரைகளும் வீழ்த்தப்பட்டன. சாரதியும் தேர்த் தட்டினின்று தள்ளப்பட்டான். பிறகு அவனுடைய கொடிமரமும் தேரும் துண்டு துண்டாக்கப்பட்டன. கர்ணன் தேரிழந்தவனாகச் செய்யப் பட்டான். கௌரவ

சேனையில் "ஆ! ஆ!" என்ற பேரொலி கிளம்பிற்று. தேரிழந்த கர்ணனும் துரியோதனனுடைய தேரில் ஏறிக் கொண்டான்.

இதைப் பற்றித் திருதராஷ்டிரனுக்குச் சொல்லும்போது சஞ்சயன், "உலகத்தில் கிருஷ்ணனும் பார்த்தனும் சாத்யகியுமே சிறந்த வில்லாளிகள். இவர்களுக்குச் சமமான நான்காவது வில்லாளி இல்லை" என்றான்.

அருச்சுனன் கௌரவ சேனையில் பெரும்பான்மையான பாகத்தைத் தோல்வியடையச் செய்து ஜயத்ரதனை அடைந்தான். அபிமன்யுவின் வதத்தையும், தாங்கள் அனுபவித்த பல துன்பங்களையும் எண்ணி, நெருப்பைப் போல் கோபத்தால் ஜொலித்த அருச்சுனன் அன்று காண்டீபத்தை இரு கைகளாலும் பிரயோகம் செய்தான். இரு கைகளாலும் விற் பிரயோகம் செய்யும் திறமையினால் சவ்யசாசி என்கிற புகழ்ப் பெயரை அருச்சுனன் பெற்றிருந்தான். கலவரமடைந்த கௌரவ வீரர்களுக்கு வாய் திறந்து நின்ற அந்தகனைப் போல் காணப்பட்டான்.

சைந்தவனைக் காப்பதற்காக அவனைச் சூழ்ந்து கொண்டு நின்ற அசுவத்தாமன் முதலிய மகாரதர்களுக்கும் அருச்சுனனுக்கும் அப்போது நடந்த மகத்தான போரை வியாசரைத் தவிர வேறு யாரும் வருணிக்க முடியாது.

நடுவில் நின்று தடுத்த மகாரதர்களனைவரையும் தோல்வியடையச் செய்து விட்டு அருச்சுனன் ஜயத்ரதனைத் தாக்கினான்.

யுத்தம் வெகு நேரம் நடந்தது. இரு திறத்திலும் சூரியனை அடிக்கடி பார்க்கலாயினர். சைந்தவனும் மகாசூரன். எளிதில் அருச்சுனனுக்குத் தோற்பவனல்ல. அஸ்தமனம் நெருங்கிச் சூரியன் செந்நிறம் கொண்டான். அப்போதும் யுத்தம் முடியவில்லை.

"இன்னும் சிறிது நேரமே இருக்கிறது. ஜயத்ரதன் பிழைத்தான். அருச்சுனனுடைய பிரதிக்ஞை வீணாயிற்று" என்று துரியோதனன் தனக்குள் எண்ணி மகிழ்ந்தான். அப்போது திடீர் என்று இருள் சூழ்ந்தது.

பாண்டவர்களுடைய சேனையில் "பகல் முடிந்து விட்டது. ஜயத்ரதனுடைய வதம் நடைபெறவில்லை. அருச்சுனனுடைய பிரதிக்ஞை வீணாயிற்று" என்று அனைவரும் பேசத் தொடங்கினர். கௌரவ சேனையில் மகத்தான சந்தோஷ ஆரவாரம் உண்டாயிற்று.

ஜயத்ரதனும் சூரியன் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்துக் கொண்டு, "பிழைத்தேன்" என்று எண்ணினான்.

கிருஷ்ணன், "தனஞ்சய, சிந்து ராஜன் சூரிய மண்டலத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். இருள் என்னால் உண்டாக்கப்பட்டது. சூரியன் இன்னும் அஸ்தமனம் ஆகவில்லை. உன் பிரதிக்ஞையைப் பூர்த்தி செய். இதுவே சமயம்" என்றான்.

உடனே காண்டீபத்தினின்று ஒரு அம்பு விடுபட்டது. பருந்து கோழிக் குஞ்சைக் கவ்வுவது போல சைந்தவனுடைய தலையை அது கவர்ந்தது.

அதே சமயம் கிருஷ்ணன், "ஜயத்ரதனுடைய தலை கீழே விழலாகாது. அதை அந்தரத்திலேயே அம்புகளால் தூக்கிச் செலுத்தித் தந்தை விருத்தக்ஷத்திரனுடைய மடியில் விழச் செய்" என்று ஞாபகமூட்டினான். அருச்சுனன் விடுத்த அம்பு ஜயத்ரதனுடைய தலையை அப்படியே ஆகாயத்தில் தூக்கிச் சென்றது. அது விசித்திரக் காட்சியாயிருந்தது.

விருத்தக்ஷத்திர ராஜன் தன் ஆசிரமத்தில் மாலை உபாசனையில் இருந்தான். கருத்த தலைமயிரும், காதில் தங்கக் குண்டலங்களும் கொண்ட ஜயத்ரதனுடைய தலை தியானத்தில் ஆழ்ந்திருந்த தந்தையின் மடியில் விழுந்தது. ஜபத்தை முடித்து அவன் கண் திறந்து எழுந்ததும் அந்தத் தலையானது உருண்டு தரையில் விழுந்தது. உடனே விருத்தக்ஷத்திரனுடைய தலை நூறு துண்டாக வெடித்தது. ஜயத்ரதனும் அவன் தந்தையாகிய சிந்து ராஜனும் வீர சுவர்க்கத்தை ஒரே சமயத்தில் அடைந்தார்கள்.

கேசவனும் தனஞ்சயனும் பீமனும் சாத்யகியும் யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் சங்கங்களை ஊதி வெற்றி முழக்கம் செய்தார்கள். தருமராஜன் அதைக் கேட்டு, "அருச்சுனன் சைந்தவனை வதம் செய்தாயிற்று" என்று அறிந்து கொண்டு மகிழ்ந்தான்.

அதன் பிறகு எல்லாப் பாண்டவ சேனையுடன் யுதிஷ்டிரன் துரோணரைப் பலமாக எதிர்த்தான். பதினாலாவது நாள் யுத்தம் பகலுடன் நிற்கவில்லை. இரவிலும் நடந்தது. யுத்தத்தின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க முதலில் காப்பாற்றி வந்த வரம்புகள் ஒவ்வொன்றாக அழிந்து போயின.

(தொடரும்)





## கொறிப்பதற்குக் கொஞ்சம்

# இதோ ஒரு துணை!

‘நீங்கள் வெளியூரில் இருக்கிறீர்கள். உங்கள் மனைவிக்குக் கடிதம் எழுத வேண்டுமானால் காகிதத்தையும் பேனாவையும் தேட வேண்டாம். ஒரு விசையை அழுத்திவிட்டு, நீங்கள் எழுத நினைத்திருப்பதையெல்லாம் வாய் விட்டுச் சொல்லுங்கள். அத்தனையும் நாடாவில் பதிவாகும். இப்படிப் பதிவானதை உங்கள் மனைவிக்குத் தபால் மூலம் அனுப்பி வையுங்கள். அவள் உங்கள் குரலைக் கேட்டு மகிழட்டும். அடுத்த தடவை அவளிடமிருந்து உங்களுக்குக் கடிதத்துக்குப் பதில் இதேபோல் நாடாப் பதிவு ஒன்று வரக்கூடும்!’



டேப் — ரெகார்டர்களுக்கான இப்படியொரு விளம்பரத்தை மேல்நாட்டுப் பத்திரிகையொன்றில் பார்த்தேன். விஞ்ஞான ரீதியில் அவர்களுடன் நம்மால் போட்டி போட முடியா விட்டாலும், இம்மாதிரி டேப்—ரெகார்டர்கள் தயாரிப்பதில் நாம் அவசியம் போட்டி போட்டாக வேண்டும் போலத் தோன்றியது. காரணங்கள் சொல்லட்டுமா?

நண்பர் ஒருவர் உங்களுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார், பண உதவி கேட்டு. ஆனால் அவருக்கு உதவக்கூடிய நிலையில் நீங்கள் இல்லை. இதைக் கடிதத்தில் எவ்வளவுதான் விரிவாக எடுத்துச் சொன்னாலும் அவர் நம்பத் தயாராக இல்லை! இந்தச் சந்தர்ப்பத்தில்தான் டேப் ரெகார்டரின் துணை தேவைப்படுகிறது. உங்கள் மனைவியை விட்டு ஒரு பாட்டம் அவளுடைய குறைகளைச் சொல்லச் சொல்லுங்கள். இதற்குப் பின்னணியாக உங்கள் குழந்தைகள், ''அப்பா, புதுக் கவுன் வேண்டும்!'', ''சிலேட்டு உடைஞ்சு போச்சுப்பா.... புதுசு வாங்கிட்டு வந்தாதான் கிளாசுக்குள்ளே நுழையலாம்னு டீச்சர் சொல்லிட்டாங்க!'', ''இந்தச் சட்டையைப் போட்டுக்கிட்டுப் போனால் எல்லாரும் கேலி பண்றாங்கப்பா !'' என்று கோரிக்கைக் குரல் எழுப்பட்டும்! எல்லாவற்றுக்கும் மேலாக, ''இதோ நான் காவியைக் கட்டிக் கொண்டு காசிக்குக் கிளம்பி விடுகிறேன்!''



என்று நீங்கள் கூச்சல் போடுங்கள். இந்த ஒலிப்பதிவைக் கேட்ட பிறகும் நண்பருக்கு உங்களைத் தொந்தரவு செய்ய மனம் வருமா ?

இந்த ஒரு விஷயம்தான் என்றில்லை. ஆபீசில் நீங்கள் ஒரு தப்புப் பண்ணி விட்டீர்கள்; முதலாளி அல்லது மானேஜர் கூப்பிட்டு விளாசப் போகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவரது அறைக்குள் போனவுடன் தொண்டை உலர்ந்து போய் விடுமே, நாக்கு இழுத்துக் கொண்டு விடுமே என்றெல்லாம் பயப்படவே வேண்டாம். ரெகார்டரில் உங்கள் சமாதானத்தையும், ஆபீசில் உள்ள மற்றவர்களின் (கண்டு பிடிக்கப்படாத) வண்டவாளங்களையும் சும்மா இழுத்து விடுங்கள். மானேஜர் கூப்பிடும் போது தைரியமாக உள்ளே போய் ரெகார்டரைப் போடுங்கள். அசந்து போய் விடுவார் அவர் !

சிநேகிதங்களில் தாட்சண்ணிய சிநேகம் என்றொரு தனநாச வகை உண்டு. பத்திரிகைகள் இரவல் கேட்கிறவர்கள், கார் அல்லது ஸ்கூட்டரை இரவல் கேட்பவர்கள், சினிமாவுக்கும் நாடகத்துக்கும்,– 'காம்ப்ளிமெண்டரி' டிக்கெட் கேட்பவர்கள், 'உங்கள் வீட்டுக் காப்பி பிரமாதமாக இருக்கும் என்று என் மனைவியிடம் அடிக்கடி சொல்வேன்!' என்று நாக்கைத் நீட்டிக் கொண்டு வருபவர்கள்–இத்தனை பேருக்கும் முகத்தில் அடித்தாற்போல் 'இல்லை!' என்று சொல்லத் தயக்கமாக இருக்கிறதல்லவா ?..... உங்கள் மறுப்பைப் பதிவு செய்து வைத்து விட்டால் அவர்கள் வரும்போது, ரெகார்டர் சொல்லி விட்டுப் போகிறது. உங்களுக்கும் அதற்கும் சம்பந்தமில்லாதது போல நீங்கள் முகத்தை வைத்துக் கொண்டிருக்கலாம் !

கல்யாண சீசன் ஆரம்பமாகி விட்ட இந்த வேளையில் பெண்ணைப் பெற்றவர்களுக்குஇந்தரெகார்டரைப் போலக் கைகொடுக்கும் தெய்வம் வேறெதுவும் இருக்க முடியாது. உங்கள் பெண்ணின் அங்க லட்சணங்கள், அபாரத் திறமைகள், கல்யாணத்தில் நீங்கள் செய்ய நினைத்திருக்கும் சீர் வரிசைகள், போட நினைத்திருக்கும் சம்பந்திச் சண்டைகள்–அத்தனையையும் ஒரே ஒரு முறை சொன்னால் போதும். அப்புறம் பிள்ளை வீட்டுக்காரர்கள் எத்தனை பேர் படையெடுத்தாலும், உங்கள் வாய் வலிக்கப் பதில் சொல்லவே வேண்டாம். ரெகார்டர் பார்த்துக் கொள்ளும்.

அம்மா, கல்யாணப் பெண்ணே! உனக்கும் ஒரு சந்தோஷ சமாசாரம். நீ தோடியையோ, கல்யாணியையோ அடிக்கடி சிரமப்படுத்த வேண்டாமம்மா... ஒரே ஒரு தரம் பாடு. அது போதும், உன் ஆயுளுக்கும். டேப்–ரெகார்டர் இருக்கப் பயமேன் ?

வாருமையா, இளங் காதலரே ! ஆள் பார்ப்பதற்கு அசல் தமிழ்ப் படக் கதாநாயகர் போலத்தான் இருக்கிறீர். ஆனால் உம்முடைய காதலியைத் தனிமையில் சந்திக்கும் போதுதான் உம்முடைய தைரியமெல்லாம் எங்கோ ஓடிப் போய்ப் பதுங்கிக் கொண்டு விடுகிறது, இல்லையா ?.... கவலைப்படாதீர் ! இந்த டேப் ரெகார்டரில் உம்முடைய காதலியைப் பற்றிய வர்ணனையை (நீர் நாவல்களில் படித்த சரக்கையும் சேர்த்து) அளந்துவிடும். அதைக் கேட்டு உம்முடைய காதலி அகம் குளிர்ந்து போகாவிட்டால் என்னைக் கேளும்!

மேலே சொன்னவர்கள் மட்டும் தான் என்றில்லை; இளம் பிராயத்துச் சம்பவங்களைக் கற்பனை மெருகுடன் பத்திரிகைக்காரர்களிடம் நினைவுகூர்கிற சினிமா நட்சத்திரங்கள், மேலதிகாரிக்கு வாய்க்கு ஒரு 'எஸ், சார் !' போடுகிற அடிவருடிகள், 'குழந்தை உணவா? ஸ்டாக் இல்லை' என்று கூறும் கடைக்காரர்கள்; எல்லாக் கச்சேரிகளிலும் ஒரே மாதிரி பாடுகிற பாடகர்கள்; எந்த மேடையிலும் பழைய விஷயங்களையே பேசுகிற அரசியல்வாதிகள்; வருடக் கணக்காக ஒரே நோட்ஸை மாணவர்களுக்குக் கொடுக்கிற கல்லூரி விரிவுரையாளர்கள்; 'என்ன சூடாக இருக்கிறது?' என்று கேட்ட மாத்திரத்தில் பாடம் ஒப்பிக்கும் ஹோட்டல் சர்வர்கள்; அமாவாசைத் தர்ப்பணத்துக்குத் திரும்பத் திரும்ப மந்திரம் சொல்லி அலுத்த சாஸ்திரிகள்; — என்று இப்படிப் பலருக்கும் டேப் ரெகார்டர் உதவி பண்ணக் கூடும்.

''மதுவிலக்கு; ஆட்சி மொழி; நான்காவது திட்டம்; நக்ஸல்பாரி–இவையெல்லாம் கிடக்கட்டும்; டேப் ரெகார்டர் உற்பத்தியைக் கவனியுங்கள், முதலில்!'' என்று அரசாங்கத்திடம் சொல்வதில் என்ன தப்பு ?

—எஸ்.வி.ஆர்.



நேற்றும் நாளையும்

# வழக்கும் வாதமும்

**பத்மபூஷண் ஸ்ரீ டி. எஸ். ராமஸ்வாமி ஐயர், பி. ஏ. பி. எல்,**

**தா**த்தா முத்துசாமி ஐயர். நீதிபதி; லட்சிய புருஷர். அம்மாவின் அப்பாவும் கொச்சின் ஹைகோர்ட்டில் ஒரு 'பண்டிட்' ஜட்ஜ். கொள்கைக்காகப் பதவி துறந்தவர். என் அப்பா ஜில்லா நீதிபதியாக இருந்து அகாலமாக மறைந்து விட்டவர். ஆகவே நான் இயல்பாகச் சட்டப் படிப்புப் படித்தேன். அப்போது வருஷம் சுமார் நூறுபேர் சட்டத்தில் பட்டம் பெறுவார்கள். எல்லாருமே வக்கீல் ஆவதற்கே லா படித்தார்கள். வேறு உத்தியோகத்துக்குப் போவது அரிது.

நீதிபதிகளுக்கும் வக்கீல்களுக்கும் நல்ல உறவு ('அண்டர்ஸ்டாண்டிங்') இருந்தது. வக்கீல் எடுத்துக்காட்டும் சட்ட விஷயங்களில் நீதிபதி சந்தேகப்படுவது கிடையாது. நாம் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்தால் தான் நம்மீது மற்றவர் நம்பிக்கை கொள்கிறார்கள் என்றும் வைத்துக்கொள்ளுங்கள். அவசரமாகத் தாக்கலான ஒரு வழக்கில், கேஸ் கட்டின் மீது சுற்றிய நாடாவைக்கூட அவிழ்க்காமல் ஜட்ஜிடம் கொடுத்து 'ஸ்டே' வாங்கினதுண்டு.

ஒரு கட்சிக்காரர் காலையில் ஒரு பிரச்னையைக் கொண்டு வந்தார். அன்று வழக்கு எந்த நீதிபதியிடம் வருகிறதோ அந்த நீதிபதி (பூர்வாசிரமத்தில்) வக்கீலாக இருந்தபோது வேறு வழக்குகளில் எதிர்க் கட்சிக்காரருக்காக வாதாடியிருக்கிறாராம். இப்போது அந்த நீதிபதியிடம் வந்தால் வழக்குத் தோற்று விடுமோ என்பது என் கட்சிக்காரர் கவலை.

தர்மசங்கடமான நிலைதான். எனக்கோ நீதிபதியிடம் அபார மதிப்பு. இந்தக் காரணத்தால் வழக்கு பலவீனப்படாது என்பது என் பூரண நம்பிக்கை. ஆனால் முடிவை அன்றே எடுத்தாக வேண்டும். நேரே நீதிபதியின் அறைக்குப் போய்க் கட்சிக்காரர் சந்தேகத்தைத் தனிமையில் விவரித்தேன். கண்ணியமான அந்தப் பெரியவர், அந்த வழக்கை வேறு கோர்ட்டுக்கு மாற்ற உத்தரவிட்டு விட்டார்!

வழக்குகள் சாதாரணமாக நெடுநாட்கள் நீடிக்காது. சுருக்கமாக முடிந்துவிடும். 'சட்ட பாயின்ட் இல்லை', 'சட்ட பாயின்ட் இல்லை' என்று இரண்டு மணியில் பத்துப் பன்னிரண்டு வழக்குகளை வேகமாகத் தள்ளிவிட்டார் கூட் ஸ்டார்டர் என்ற ஒரு நீதிபதி. அடுத்ததாக என் வழக்கு ஒன்று வந்தது. ''இதிலே என்ன சட்ட பாயின்ட்?'' என்றார் அவர். சட்டப் பாயின்ட் தவிர, உண்மைகளை எடுத்துச் சொல்லவும் **(Points of fact)** எனக்கு உரிமை உண்டு'' என்று தொடங்கினேன். ஜட்ஜிடம் தைரியமாகப் பேச முடியும். நல்ல ஹாஸ்யங்களை அவர்கள் ரசிப்பார்கள். தப்பாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள்.

சட்டங்கள் தெளிவாக இருந்தன. 'ரிட்' போடும் அவசியம் அதிகம் இருந்ததில்லை.



வழக்குச் செலவும் அதிகம் ஆகாது. ஆனால் பணத்துக்கு நல்ல மதிப்பு இருந்ததால் வக்கீல்கள் வசதியுடன் வாழ முடிந்தது.

இறைவன் பிட்டுக்கு மண் சுமந்த தொண்டை நினைவூட்டும் ஆவணி மாதத்தில் நான் பிறந்தேன். அதனால்தானோ என்னவோ பொதுப் பணியில் நான் நிறைய ஈடுபட்டு வருகிறேன். தொழில் ரீதியிலும் தொண்டுக்காகவே பல வழக்குகளை ஏற்றிருக்கிறேன். இப்படித்தான் அரியலூர் ரயில் விபத்தில் அட்வகேட் அசோசியேஷன் சார்பில் பொது மக்களுக்காக நான் வாதாடினேன். பல எஞ்சினீயரிங் நுட்பங்களை அறிந்து வழக்கில் பிரயோகிக்க வேண்டியிருந்தது. வழக்கின் குறுக்கு விசாரணை முழுதும் பத்திரிகையில்

வெளியானபோது முன் பின் தெரியாத என்ஜினியர்கள் என்னைப் பாராட்டினார்கள்.

மூத்தவர்கள் காட்டிய வழியில் தொழில் நடத்தி வருகிறோம், நானும் என் தம்பியும்.

## குமாரி ராதா ஸ்ரீநிவாசன், பி.ஏ.,பி.எல்.

தற்போது வருஷம் சுமார் முந்நூறு பேர் பி. எல். பட்டம் பெறுகிறார்கள். பிராக்டிஸ் பண்ணுவோர் பாதிப் பேர்தான் இருக்கும். ஐ. ஏ. எஸ்.க்குப் பயன்படும் என்று படிப்பவர் சிலர்; பி. காம். படித்து பி. எல். படிப்போர் சிலர்; சார்ட்டர்ட் அக்கவுண்டெண்டாக மாறுவோர் சிலர்; சட்ட ஞானத்தைப் பயன்படுத்திக் கம்பெனி சட்ட ஆலோசகர், தொழில் உறவு அதிகாரி என்பன போன்ற வேலையில் ஈடுபடுவோர் சிலர்.



சிறு வயதிலேயே இந்தத் துறையில் என்னை அறியாமல் ஓர் ஈடுபாடு ஏற்பட்டு விட்டது. ஷேக்ஸ்பியர் நாடகத்தில் போர்ஷியா வழக்கறிஞராக வந்து சாகஸம் செய்த பகுதி என்னைக் கவர்ந்த இலக்கிய நிகழ்ச்சி. 'ஹிந்து' ஸ்ரீநிவாசன் என்னை 'போர்ஷியா' என்றே செல்லமாக அழைப்பார்! குடும்பத்தில் நான் மட்டுமே இத் துறையில் ஈடுபட்டேன்.

சட்டப் படிப்பில் பலரும் ஏதாவது ஒரு பகுதியை விசேஷமாகப் பயில்கிறோம். சர்வ தேசச் சட்டத்தையும் அரசியல் அமைப்புச் சட்டத்தையும் நான் சிறப்பாகப் படித்தேன். வி. கே. திருவேங்கடாச்சாரி அவர்களுடன் பிராக்டிஸ் பண்ணுகிறேன்.

இது 'ஓவர் கிரவுடட்' துறைதான். ஆனால் வழக்கை எடுத்துச் சொல்லும் திறமையும் சாமர்த்தியமும் இருப்போருக்கு இது இன்னும் தங்கச் சுரங்கம்தான்.

பெண்கள் பல ஆண்டுகளாகவே வக்கீலாக இருக்கிறார்கள். தற்போது எண்ணிக்கை அதிகம். கேரளாவில் சுமார் முந்நூறு பேரும் பம்பாயில் எழுநூறு பேரும் இருக்கிறார்களாம். அங்கெல்லாம் மாஜிஸ்டிரேட் போன்ற வேலையும் பார்க்கின்றனர். கேரளாவில் ஒரு பெண்மணி ஜட்ஜாக இருந்தது நினைவிருக்கலாம்.

நியாயம், நீதி எல்லாம் வேத காலம் முதல் நிலவி வரும் கொள்கைகள் என்றாலும், 'சட்டபூர்வமாக' என்பது நமக்கு ஒரு புதுக் கருத்துதான்.

தனி மனிதன் வாழ்வின் ஒவ்வோர் அம்சமும் தற்போது சட்டத்தால் பாதிக்கப்படுகிறது. வீட்டு வாடகை உயர்வு, டெலிபோன் கட்டணத் தகராறு, கசப்பான தாம்பத்தியம், தொழில் உறவு சீர்கேடு — எல்லாம் சட்டத்தின் எல்லைக்குள்தான். சமூகமோ, நிர்வாகமோ, வலியோரோ தனிமனிதர் மீது காட்டக்கூடிய அதிகாரத்தை வரம்பு கடக்காமல் பார்த்துக் கொள்வது சட்டத்தின் வேலையாகிறது. அதிகாரத்தின் கொட்டத்தை அடக்கச் சட்டத்தால்தான் முடியும். அரசியல் சாஸனத்தின் பலத்தால் இதுவரை சுமார் 350 சட்டங்கள் தள்ளப்பட்டன!

இது உரிமை யுகம். முன் தலைமுறைக்கு இப்போது உரிமைகள் அதிகம். அவற்றையெல்லாம் காக்கும் வழக்கறிஞர் பொறுப்பும் அதிகரிக்கிறது. எந்தக் கோர்ட்டிலும் வழக்காடுவதற்கு உரிய 'ஸந்நது' இப்போது வழங்கப்படுகிறது. இதை உத்தேசித்து, ஹைகோர்ட்டிலும், சுப்ரீம் கோர்ட்டிலும் ஆங்கிலமே நீடிப்பதுதான் சௌகரியம். அதுதான் நடைமுறை சாத்தியமும்கூட.

கோர்ட்டுக்குப் போனால் செலவு. அதனுடன் காலதாமதம். நடைமுறைச் சிக்கல்கள் பல. குடும்பப் பூசல்கள், ஜீவனாம்ச விஷயம், ஸ்வீகாரம், குழந்தை வளர்ப்பு உரிமை போன்ற விவகாரங்களைக் கோர்ட்டுக்கு வெளியே, மூத்தோர் முன்னிலையில், தீர்த்துக் கொள்ளலாமே? இதற்கெனச் சில இளம் வக்கீல்கள் அங்கங்கே முயற்சி எடுத்து வருகின்றனர்.

இப்போதே தொழில் துறையில் பல விவகாரங்கள் கோர்ட்டுக்கு வெளியே மத்தியஸ்தத்துக்கு விடப்பட்டு, தீர்மானமாகின்றன. இவை சட்டபூர்வமான ஒப்பந்தங்கள். இதனால் செலவும் குறைவு. விவகாரமும் சீக்கிரம் முடிகிறது.

என்னதான் சட்டஞானம் இருந்தாலும் வழக்குகளில் ஈடுபட ஈடுபடத்தான் சில தெளிவுகள் பிறக்கின்றன. தருமம் வேறு, நியாயம் வேறு; நியாயம் வேறு, நீதி வேறு; நீதி வேறு, சட்டம் வேறு; சட்டம் வேறு, சடங்கு வேறு; சடங்கு வேறு, சக்தி வேறு என்றெல்லாம் புலனாகிறது.

பேட்டி: **அம்பி ஆசீர்வாதம்**

# 007 பாலு

கதை: குமரன் | 19 | படம்: விஜயா

நடிகை ஸரிதாதான் ராணி என்பதையோ, அவள் வீட்டிலேயே ரகசியக் கதவுக்குப் பின்னால் ராஜாவின் மர்ம உலகம் மறைந்து கிடக்கிறது என்பதையோ, தன்னை அவர்கள் தீர்த்துக் கட்டிவிடத் தீர்மானித்திருக்கிறார்கள் என்பதையோ அறியாத பாலு அயர்ந்து தூங்கினான். காலையில்....







சற்று நேரத்துக்குப் பிறகு நண்பர்கள் நடைபாதையில் நடந்து கொண்டிருக்கையில்.....



சட்டென்று சுரேஷ் பாலுவை இப்பால் இழுத்தான். அவர்களை உரசுவது போல் சென்றது கார். மயிரிழையில் தப்பினான் பாலு.












சிறிது நேரத்தில்.... ஜனசந்தடி மிகுந்த ஒரு பகுதியில் சுரேஷைத் திடும்-மென யாரோ வேகமாக வரும் பஸ்ஸின் முன்னால் தள்ளி விட்டார்கள். பாலு மின்னலென இயங்கி சுரேஷைக் காப்பாற்றினான். சட்டென்று பஸ் பிரேக் போட்டு நின்றதால்.....












# புதுடயரா
# அல்லது டிவிஎஸ்
# ரீடிரெட் செய்ததா?

***சொந்தக்காரருக்கு மட்டுமே தெரியும்!***

மதிநுட்பமுள்ள கார் சொந்தக்காரர்கள் ஏற்ற முறையில் உங்கள் டயர்கள் ரீடிரெட் செய்யப்படுவதன்மூலம் அதிக நாளைக்கு பயன்படுவதையே நீங்கள் விரும்புவீர்கள். எனினும் வெளிப்படையாக ரீடிரெட் செய்யப்பட்டதாக தோன்றும் ஒரு டயரை உபயோகிக்க நீங்கள் விரும்பமாட்டீர்கள். டி வி எஸ் ரீடிரெட் செய்தவை புதியனபோலவே தோற்றமளிக்கின்றன. புதியன போலவே உழைக்கின்றன. அவை ரீடிரெட் செய்யப்பட்டவை என்று உங்களுக்குமட்டுமே தெரியும். மேலும் எவ்வளவோ செலவு மிச்சம்! புதிய டயர் ஒன்றின் விலைக்கு நீங்கள் மூன்று டயர்களை ரீடிரெட் செய்துகொள்ளமுடியும்!




**உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்**

*இந்தியாவிலேயே மிகப்பெரிய ரீடிரெடிங் ஸ்தாபனம்*

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்** (இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

பங்களூர்-கோயமுத்தூர்-சென்னை-புதுக்கோட்டை-செகந்திராபாத்-திருநெல்வேலி-விஜயவாடா

SI-4743

# ரகசிய ஒற்றன்



வைர மாலை, கூட்டுக் கொள்ளைத் திட்டம், பரஸ்பரம் காலை வாரிவிடுதல் முதலியவற்றை நம் நாடக மேடை ஏற்கனவே நிறைய அயல்நாட்டுச் செலாவணிக்கு அஞ்சாமல் இறக்குமதி செய்திருக்கிறது. ஆனால் காட்சிக்கு ஒரு வகை பிங்கான் ஜாடியாக, ஜாடி ஆராய்ச்சிப் பேராசிரியராக வரும் பூர்ணம் விசுவநாதன் கையில் கொடுத்து, அவரை மேடைக்கு அனுப்பும் பாணி தேடிக் கிடைக்காத புதுமைதான். இது பழைமைக்குத் திரை போட உதவுகிறது.

ஐந்து நிமிட காலம் மேடையில் 'அச்சப் பிச்சு' என்ற எழுத்தாளர் பாத்திரத்தில் ராமபத்திரன் தோன்றினாலும் 'பசி' என்ற உணர்ச்சிக்கும் நடிப்பாக மாறும் தன்மை உண்டு என்பதை முக பாவத்தால் நிரூபிக்கிறார். இட்லி என்றவுடன் இத்தாலிய நாட்டுப் பிள்ளையாருக்கும், சட்னி என்றவுடன் ஆஸ்திரேலிய நாட்டு சிட்னி நகர ஜாடிக்கும் தன் ஆராய்ச்சி நினைவை விரட்டி, எதிரே பசியுடன் தவிக்கும் அச்சப்பிச்சுவை அவதிக்குள்ளாக்கும், ஞாபக மறதிப் பேராசிரியர் பூர்ணம் விசுவநாதனைப் பத்து நாட்கள் கட்டாய உண்ணாவிரதத்துக்கு ஆளாக்கலாம் என்று ரசிகர்கள் நினைப்பார்கள். அந்த அளவிற்குப் பூர்ணம், தம் நினைவுக் குறைவையும் ஆராய்ச்சி ஆர்வ நிறைவையும் கலந்து சர்வ அலட்சியமாக நடித்துக் கலகலப்பைத் தோற்றுவிக்கிறார்.

ஜெமினி மகாலிங்கம் போலி அச்சப் பிச்சுவாக வந்து பேராசிரியர் வீட்டில் முகாம் இடுகிறார். அச்சப் பிச்சு என்ற பெயருக்குச் சமயோசிதமாக விளக்கம் கொடுக்கும் கட்டம் இயற்கையாக இருக்கிறது. ரௌடி மணியை மடக்கித் தம் வழிக்குக் கொண்டு வரும் கட்டத்தில் இவரிடம் காணப்படும் சிரமமில்லாத இயற்கை நடிப்பு மற்ற கட்டங்களிலும் துணைக்கு வரும்படி இவர் கவனித்துக்கொள்ள வேண்டும். மணக்கால் மணி, ரேஸ் அபிமானி ரகுவாக வந்து கலகலப்பை ஏற்படுத்துகிறார். மூக்குக் கண்ணாடி இல்லாத நேரத்தில் தன் பேராசிரியத் தந்தைக்குக் கொலுப் பொம்மைப் பிள்ளையாரைப் பத்தாயிரம் ரூபாய்க்கு விற்க முயற்சி செய்யும் கட்டத்தில், மணக்கால் மணி மறக்க முடியாத மணி ஆகிவிடுகிறார்!

பல பெண்மணிகள் வருகிறார்கள். அவர்கள் காட்சிக்குக் காட்சி மாற்றும் உடைகள் பளிச்சிடுகின்றன.

'இதென்ன! எல்லாம் ஓட்ஹௌஸ் பாத்திரங்களாக வலிய வருகிறார்கள்' என்று சிலர் நினைத்தால் வியப்பொன்றுமில்லை. கதை உதவியவர் ஓட்ஹௌஸ் என்று தயாரிப்பாளர்கள் ஒப்புக்கொண்டிருக்கலாம்! பெருமையாகக்கூட இருந்திருக்கும்.

ஜெமினி மகாலிங்கத்தால் தயாரிக்கப்பட்டு, கே. எஸ். நாகராஜனால் டைரக்ட் செய்யப்பட்டிருக்கும் திருவல்லிக்கேணி கலா நிலையத்தாரின் "ரகசிய ஒற்றன் 777" இடைச் சிரிப்பலைகள் தோற்றுவித்து ரசிகர்களை அடிக்கடி கடிகாரத்தைப் பார்க்கவிடாமல் செய்யும் அமைதியான நகைச்சுவை நாடகம்! - பட்டினத்தான்

# கனவு

முரளிதனது மனத்தில் தோன்றும் ஆசைக் கனவுகளை மையமாகக் கொண்டு ஸ்ரீமதி கல்யாணசுந்தரி ஜகந்நாத் பலதரப்பட்ட பாத்திரங்களை நகைச்சுவை மிளிரப் படைத்து உலவ விட்டிருக்கும் நாடகமே கனவு. 'டிபன்ஸ் அக்கவுண்ட்ஸ் ரெக்ரியேஷன் கிளப்' அங்கத்தினர்கள் அக்கனவை மேடை ஏற்றி நனவாக்க முயன்றிருக்கிறார்கள்.

நடிகர்கள் அனைவருமே இந்த நாடகத்தின் மூலம் தங்கள் மேடைக் கனவை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும் ஒரு சிலர் குறிப்பிடும்படியாக இடம் பெற்றிருக்கிறார்கள்.

பல்லவி பதஞ்சலியாக வரும் திரு எஸ். ராஜகோபாலன் தன்னடக்கமாக நடித்துச் சில இடங்களில் தாமே மகிழ்ந்து விடுகிறார். ராமு என்னும் சங்கீதப் பித்தனாக வரும் திரு ஆர். ராஜகோபாலனோ நையாண்டித்தனமாகப் பாடித் தம் இசைப் புலமையோடு நடிப்புத் திறமையையும் வெளியிட்டிருக்கிறார்.

'போயட்ரீஸ்' சீனுவாக வரும் திரு கே. சாரங்கரத்னம், எழுத்தாளன் ரவியாக வரும் திரு ஆர். ரத்னகிரி, ஆனந்தாக வரும் ஸ்ரீ எஸ். நாகசுப்பிரமணியம், அப்பா பரமசிவனாக வரும் திரு பாலசுப்பிரமணியம் ஆகியவர்கள் நடிப்பில் தாங்கள் 'அமெச்சூர்' இல்லை என்று காட்டுகிறார்கள். ராதாவாக வரும் குமாரி சூர்யப்பிரபா தமது நடிப்பால் எடுப்பாகத் திகழ்கிறார். நாடகத் துறையில் நன்கு பழகிய திரு தோட்டக்கார விசுவநாதன் நாடகத்தை 'டைரக்ட்' செய்ததுடன் நடித்தும் இருக்கிறார். 'கனவு' சுவாரசியமான நினைவுதான்.




எவ்வளவு கடினமான
வேலையாய் இருந்தாலும் சரி,
ஒரு கப் A-1 தேநீரைப்
பருகி புத்துணர்ச்சி
அடையுங்கள் —
அதிக நறுமணமும்
ருசியும் உள்ளது
உங்கள் பணத்தையும்
மீதப்படுத்துகிறது




Brooke Bond Tea
Brooke Bond

ப்ருக் பாண்ட்
A-1 தேயிலைத்தூள்
அதிக கோப்பைகள் சிறந்த
தேநீர் தருவது




## அதிகாரப் பத்திரம்!

**ப**ல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னாலே உலகம் இளமைப் பருவத்திலிருந்தபோது பூவுலகின் அரசர்களெல்லாம் ஒரு முடிவுக்கு வந்தார்கள். நாய்களுக்கு அவைகளின் சேவைக்கேற்ப கௌரவமளித்து உயர்த்த வேண்டும் என்பதே அம்முடிவு. பிரயாணங்களில் தங்களுடன் வருவதற்கும், தங்கள் சொத்துக்களைப் பாதுகாப்பதற்கும் நாய்களுக்கே உரிமை என்று அதிகாரப்பத்திரம் தயாரித்து வழங்கினார்கள்.

இந்தப் பாராட்டும் கௌரவமும் பூனைகளைப் பொறாமையால் துடிதுடிக்க வைத்தன. பூனைகளெல்லாம் மகாநாடு கூட்டின. 'மியாவ்', 'முயாவ்' என்றெல்லாம் பேசித் தீர்த்தன. முடிவில் நாய்களின் அதிகாரப் பத்திரத்தை ரகசியமாகத் திருடிக் கொண்டு வந்து விடுவது என்று முடிவு கட்டின. மகாநாட்டின் தீர்மானப்படி அதிகாரப் பத்திரத்தைக் கிளப்பிக் கொண்டு வந்தன சில பொல்லாத பூனைகள். அதைச் சுருட்டி எரவாணத்தில் குப்பை கூளங்களுக்கு நடுவில் ஒளித்தும் வைத்து விட்டன. எலிகள் நடமாடும் இடமாயிற்றே எரவாணம்! ஓர் எலி அந்தச் சுருளைக் கண்டது. தன் மகத்தான கண்டுபிடிப்பைப் பற்றித் தன் தோழர்களிடம் சொல்லிற்று அந்த எலி. பல எலிகள் ஒன்று கூடி ஒரு நாள் அந்த அதிகாரப் பத்திரத்தைப் படித்துப் பார்த்தன. அதன் பெருமதிப்பைப் புரிந்து கொண்ட அவை, உடனே ஒரு மகாநாட்டைக் கூட்டின. பூனைகளையும் நாய்களையும் அடக்கியாளும் அதிகாரத்தைத் தாங்கள் பெறுவது எப்படி என்று காரசாரமாக விவாதித்தன. 'கீச் மூச்' என்று கூச்சல்கள் பலத்ததே ஒழிய எவ்வித முடிவுக்கும் வர முடியவில்லை. கடைசியில் ஒரு கிழட்டு எலி, ''இந்த அதிகாரப் பத்திரம் தவறான நபர்களின் கைகளில் சிக்குவதைத் தடுப்பதற்கான ஒரே மார்க்கம் இதை நாம் சாப்பிட்டு விடுவதுதான்'' என்றது. இந்த அபாரமான யோசனையை எல்லா எலிகளும் கைகொட்டி வரவேற்றன. சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பத்திரம் எலிகளின் பட்சணமாகி மறைந்தது.

தங்கள் அதிகாரப் பத்திரத்துக்கு நேர்ந்த கதியை அறியாத நாய்கள் ஒரு நாள் ஒரு பெரிய மகாநாட்டைக் கூட்டி, அதில் தங்களுக்கு மனிதர்கள் அளித்துள்ள மகத்தான தகுதியை மற்ற அங்கத்தினர்களுக்குப் பிரகடனப் படுத்த விரும்பின. மகாநாடு கூட்டப்பட்டது. பத்திரத்தைப் பத்திரமாக வைத்திருக்கும்படி ஒப்படைக்கப்பட்ட நாயிடம் அதைக் கொண்டு வரும்படி கேட்டுக் கொண்டன மற்ற நாய்கள். அப்போதுதான் அது பறிபோன பரிதாபத்தை அந்த நாய் உணர்ந்தது. தன் நண்பர்களிடம் பூனைகளின் வேலைத்தனம்தான் அது என்றது. நாய்களுக்கு வந்த கோபத்தைச் சொல்லவா வேண்டும்?



பூனைகளின் குடியிருப்புக்களை முற்றுகையிட்டு, நிபந்தனையின்றித் தங்கள் அதிகாரப் பத்திரத்தை ஒப்படைக்குமாறு ஆணையிட்டன. முதலில் பூனைகள் ரொம்பச் சாதுப் போலத் தங்களுக்கு ஏதுமே தெரியாது என்று கண்களை மூடியபடி கூறின. ஆனால் நாய்களின் உறுமல், அவற்றைக் கொஞ்ச நேரத்தில் உண்மையை ஒப்புக் கொள்ள வைத்துவிட்டது. எரவாணத்துக்குப் போய்த் தேடின. குப்பை கூளங்களைக் குடைந்து நோண்டிப் பார்த்தன. அது அங்கு இருந்தால் தானே கிடைக்கும்? எங்கு போயிற்று? அந்த இடத்தில் இருட்டுத்தனமாக வந்து போவது எலிகள்தான். குப்பையில் அவற்றின் உளிப்பல் அடையாளம்கூட இருந்தது. உடனே எலி வளைகளை நோக்கிப் படை எடுத்தன பூனைகள். பலமான மோதல்களுக்குப் பிறகு எலிகள், தங்கள் தலைவரின் உத்தரவுப்படி அதிகாரப் பத்திரத்தை ஆகாரமாகத் தின்றுவிட்டதாக ஒப்புக் கொண்டன. பூனைகளின் கோபத்தைப் பார்க்க வேண்டுமே!

அன்றிலிருந்து நாய்கள் பூனைகளை வெறுக்க, பூனைகள் எலிகளை வெறுக்க ஒன்றையொன்று பார்த்தால்....? என்ன நடக்கிறதென்றுதான் உங்களுக்குத் தெரியுமே. நான் சொல்லவா வேண்டும்?

## விந்தையல்லவோ!

மத்திய இந்தியாவில் பாஸ்டார் என்று ஒரு மாகாணம். அங்கு போரோஜா என்று ஒரு பிரிவினர் வாழ்கிறார்கள். இவர்களுடைய திருமணத்தின் போது ஒரு விநோதமான சடங்கு. வைபவத்துக்கு அழைக்கப்பட்ட விருந்தினர்கள் ஒன்று சேர்ந்து கோபுர நடனம் ஆடுகிறார்கள். இரவு முழுதும் நடைபெறும் ஒரு கோலாகல நடனம் இது. இதில் பன்னிரண்டு பேர் கலந்து கொள்ளுகிறார்கள். ஒருவர் கைகளை ஒருவர் அணைத்துப் பிடித்தபடி ஆறு பேர் வட்டமாக நிற்பார்கள். அந்த ஆறு பேர் தோள்களின் மீது மற்ற ஆறு பேர் அதே போலக் கைகோத்தபடி ஏறி நிற்பார்கள். இந்த நிலையிலேயே இந்தப் பன்னிருவரும் சுற்றிச் சுழன்று நாட்டியமாடுவார்கள். கீழுள்ள ஆறு பேர் மேலும் மேலுள்ளவர் கீழேயும் இடமாற்றம் செய்து கொண்டு தொடர்ந்து ஆடுவார்கள். திருமண விருந்துக்கு அழைத்தவர்களுடன் தங்கள் நட்பின் நெருக்கம் எவ்வளவு என்பதன் அளவுகோலாக நடனத்தின் நேரம் கணக்கிடப்படுமாம். இன்னொரு நம்பிக்கையும் இவர்களிடையே நிலவுகிறது. இந்தக் கோபுர நடனத்தில் ஒவ்வொரு மணி நேரமும் மணமக்களுக்குப் பத்து வருஷ இன்ப வாழ்வைத் தருமாம். அப்படியானால் அலுக்காமல் சலிக்காமல் இரவு முழுதும் நடனமாடக் கேட்பானேன்?



---



## இது என்ன?

மேற்கு ஆப்பிரிக்காவைச் சேர்ந்த 'பௌலா' என்ற இனத்தின் கௌரவமான பெண் நாகரிகமாக உடுத்துவாளானால் அவளது தலையலங்காரத்தில் நிஜமானதோர் தேன்கூடு இடம் பெறும். இது கற்பனையல்ல. உண்மை!

## இயற்கை வினோதம்

உலகத்தில் பல கோடிப் பூச்சி இனங்கள் இருக்கின்றன. அவற்றில் எல்லாம் மிகப் பெரியது நீங்கள் படத்தில் காணும் கோலியத் வண்டுதான். இது ஆப்பிரிக்காவில் காணப்படுகிறது. சாதாரணமாக இது நான்கு அங்குல நீளமிருக்கும். இது பறக்கும்போது வினோதமான சப்தம் உண்டாக்கும். அடைத்து வைக்கப்பட்ட நீராவியைத் திறந்து விடும்போது ஏற்படும் சப்தத்தைப் போல் இருக்கும் அது என்கிறார் ஓர் ஆப்பிரிக்கவாசி. இதன் முதுகில் வெள்ளையும் கருப்புமாகக் கோலங்கள் இருக்கும். கவர்ச்சிகரமான வண்டு இது. இதன் முதல் மாதிரியை 1770ல் ஐரோப்பாவுக்குக் கொண்டு போனபோது இதன் விலை ஒன்றுக்கு 500 பிராங்குகள் வரை போயிற்றாம். இன்று இதற்கு இத்தனை மதிப்பு இல்லாவிட்டாலும் ஆப்பிரிக்கச் சுதேசிகளிடம் இந்த ராட்சச வண்டுகளுக்குள்ள மவுசு குறையவில்லை. இதன் பெரிய, கொழுத்த புழுநிலை (லார்வா) 'சூப்' போன்ற உணவு வகைகளுக்கு நல்ல சுவையூட்டக் கூடியதாம்! ஆப்பிரிக்கக் காடுகளில் இதைத் தேடி அலைந்து சேகரிப்போர் பலர். மரங்களின் சோற்றை ஆகாரமாக உண்டு வளர்ந்து வாழுகின்றன இவ்வண்டுகள். ஆண் வண்டு மரப் பட்டையைத் துளையிட்டுச் சோற்றுப் பகுதி வரை குடைந்து கொண்டு போய்விடும்.





### அத்தியாயம் பத்தொன்பது

## நல்ல சேதி!




ஒரு சாஸரில் பில்லைக் கொண்டு வந்து வைத்தான் வெயிட்டர். இருபத்தைந்து ரூபாய்க்கு மேல் ஆகியிருந்தது. உடனே ரட்சகன் தன் மணிபர்சைத் திறந்தான். அவனை முந்திக் கொண்டு நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து சாஸரில் போட்டான் முத்துசிவன்.

''வேண்டாம் மிஸ்டர் சிவன்! என் மாமனார் கிட்டக் குழையடிச்சு ஐம்பது ரூபாய் வாங்கினேன். நாடகத்துக்கு வந்தவனை 'புக்' பண்ண அட்வான்ஸ் கொடுத்தது போக மீதப் பணம் இருக்குது. பணத்தை மிச்சப்படுத்திக் கொண்டு போனால் என் மாமனார் கோபிச்சுக்குவார். அதனால் பில்லுக்கு நானே பணம் கொடுத்துடறேன்'' என்று அமர்க்களமாகச் சிரித்தபடி சாஸரைத் தன் பக்கமாக இழுத்தான் ரட்சகன்.

''பரவாயில்லே, பிரதர்! இன்னைக்கு ஒரு நாள் எனக்காக உன் மாமனார் கோபத்தை வாங்கிக் கட்டிக் கொள்!''

வெயிட்டர் மீதிப் பணத்தைக் கொண்டு வந்து வைத்தான். அவனுக்குத் தாராளமாக 'டிப்' கொடுத்து விட்டுச் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு ரட்சகனின் தோள் மீது கைபோட்டவாறு ஹோட்டலை விட்டுப் புறப்பட்டான் முத்துசிவன்.

அவன் வீடு வந்து சேர இரவு பத்து மணிக்கு மேல் ஆகிவிட்டது. வீட்டின் வராந்தா மூலையில் தம்பி வலம்புரி நாற்காலியில் குத்துக்காலிட்டு உட்கார்ந்து எங்கோ வெறித்துப் பார்த்தவாறு யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

முத்துசிவன் அவனைப் பார்த்தும் பாராதவன் போல் உள்ளே சென்று உடைகளைக் களைந்து வேறு ஆடை தரித்துக் கொண்டு குழாயடிக்குப் போய்ச் சாவதானமாக முகம் கை கால் களைக் கழுவித் துடைத்தவாறு தன் அறைக்குத் திரும்பினான்.

அன்னபூரணியம்மாள் பிள்ளையாண்டானுக்கு உணவு படைக்க இலை போட்டாள். இதைக் கவனித்த முத்துசிவன், ''எனக்குச் சாப்பாடு வேண்டாம்மா! நான் சாப்பிட்டுவிட்டு வந்துட்டேன்'' என்று குரல் கொடுத்தான்.

சமைத்த உணவெல்லாம் வீணாகி விடுமே என்று கவலைப்பட்ட அன்னபூரணி, 'சரி; வலம்புரி வந்திருக்கிறான். அவனைச் சாப்பிட வைத்து அனுப்பலாம்' என்று எண்ணியவளாய், சமையலறையிலிருந்து வெளியே வந்தாள்.

''ஏம்மா, அவன் எதற்கு வந்திருக்கிறான்?'' என்று கேட்டுக் கொண்டே தன் படுக்கை விரிப்பை உதறிப் போடுவதில் முனைந்தான் முத்துசிவன்.

''சும்மா பார்க்கத்தான் வந்திருப்பான்'' என்று புன்னகையுடன் பதிலிறுத்தாள் அன்னபூரணி.

''நீங்க ஒண்ணும் கேட்கலியா?''

''கேட்டேன். அண்ணாவைப் பார்க்கணும்னு சொன்னான்; அவ்வளவுதான்.''

தன்னை அவன் பார்க்க வந்த காரணம் என்னவாயிருக்கும் என்பதை உடனே புரிந்து கொண்டவன் போல் தலையாட்டிக் கொண்ட முத்துசிவன், கோபமாகத் தலையணையை இழுத்து இப்படியும் அப்படியுமாகப் போட்டுத் தட்டினான். பிறகு சரேலெனத் திரும்பி வராந்தாவை நோக்கி நடந்தான்.

வலம்புரி ஒரு துண்டுக் காகிதத்தைப் பிரித்து முட்டிக் கால் மீது வைத்து ஏதோ பரபரவென்று எழுதி மடித்து ஜேபியில் திணித்துக் கொண்டு வழக்கம்போல் சிந்தனையில் ஆழ்ந்தான்.

பின்னால் கைகளைக் கோர்த்தபடி வந்து நின்ற முத்துசிவன் சிறுபொழுது அவனையே பார்த்துவிட்டு, ''ஏண்டா

வலம்புரி என்ன விஷயம்? ஏன் இங்கு வந்து உட்கார்ந்திருக்கிறே?'' என்று சற்று அதட்டலாகக் கேட்டான்.

திடுக்குற்றுத் திரும்பிய வலம்புரி தன்னைச் சுதாரித்துக் கொண்டு ''ஒண்ணுமில்லேண்ணே!... சும்மா... இப்படி வந்தேன்!'' என்றான் மூக்கடைத்த குரலில்.

தன் மனைவியிடம் சண்டை கிண்டை போட்டுக் கொண்டு வந்திருப்பானோ என்று எண்ணினான் முத்துசிவன். ஆனால் அப்படி ஏதேனும் வாயடி கையடி நடந்தால் சுந்தரிதான் முதலில் ஓடி வருவாள் என்பது அவனுக்குத் தெரியும். ''மணி பதினொன்றாகப் போறதே! ஏதாவது சொல்லணும்னா சொல்லுடா!''

மெல்லச் சிரித்த வலம்புரி ஏதோ பெரிய தமாஷ் விஷயத்தைச் சொல்லப் போகிறவன் போல் கையை நீட்டி விரல்களைக் குவித்தான். பிறகு தான் சொல்லப் போவதிலுள்ள ஹாஸ்யத்தைத் தானே வெகுவாக ரசிப்பவன் மாதிரி படபடவெனச் சிரித்தான். அப்படிச் சிரித்த அதிர்ச்சியில் அவனுடைய கண்கள் கலங்கி மூக்கிலும் நீர் ஒழுகி விட்டது. அதோடு தான் சொல்ல நினைத்ததைச் சொல்லியாகி விட்டதென்று திருப்திப்பட்டுக் கொண்டவன் போன்று மூக்கையும் கண்களையும் துடைத்துக் கொண்டு மௌனமானான்.

இவ்வளவையும் எரிச்சலுடன் பார்த்துக் கொண்டிருந்த முத்துசிவன், பொறுமை எல்லை கடந்து விடவே, ''அதாவது, பணம் கேட்க வந்தாய், இல்லையா?'' என்றான் அடித்தொண்டையில்.

வெட்கத்துடன் உடம்பை முறுக்கித் தலை குனிந்து கொண்ட வலம்புரி ''ஆமாண்ணே!... பால்காரனுக்கு ரெண்டு மாசத்துப் பணம் பாக்கி நிற்கிறது. அவன் தெருவிலே நின்னு சத்தம் போடறான். இன்னைக்குப் பணத்தைக் கொடுக்கல்லேன்னா மாட்டை வீட்டுக்குள் ஓட்டி வந்து கட்டிப் போட்டு அதுக்குப் பொட்டு, புண்ணாக்கு வாங்கி வைக்கச் சொல்லி விடுவான் போலிருக்குது. அதான் ஓர் இருபத்தைஞ்சு ரூபாய் வாங்கிக்கிட்டுப் போகலாம்னு வந்தேன்'' என்று திக்கித் திணறிச் சொன்னான்.

''பால்காரனுக்குப் பணம் கொடுக்க முடியலேன்னா ஏண்டா பால் வாங்கறே? பாலும் பழமும் சாப்பிடாமல் துரைக்குப் படுக்கப் போக முடியாதோ? பச்சைத் தண்ணியைக் குடிச்சுட்டு இருக்கிறதுதானே?''

''நான் ரொம்ப நாளா வெந்நீர் தான் குடிக்கிறது வழக்கம் அண்ணே!'' என்று சொல்லும்போதே வலம்புரிக்குச் சிரிப்பும் இருமலும் சேர்ந்து வந்து விட்டன. அவ்விரண்டாலும் அவன் கொஞ்ச நேரம் அவஸ்தையே பட்டு விட்டான்.

முத்துசிவனுக்குக் குபீரென்று கோபம் குமுறிக் கொண்டு வந்தது. பக்கத்தில் கிடந்த பிரம்பு நாற்காலியை டர்ரென்று இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டு, ஆத்திரம் அடைந்த குரலில் படபடத்தான்: ''ஏண்டா! நீ என்னதான் மனசிலே நினைச்சுக்கிட்டு இருக்கிறே? பணம் இங்கே கொட்டியா வச்சிருக்கு? கேட்கிறபோதெல்லாம் வாரிக் கொடுக்கிறதுக்கு? இல்லே, உன் அப்பா ரூபாய் நோட்டுக் காய்க்கிற மரத்தை நட்டு வைச்சுட்டுப் போயிருக்கிறாரா? எவ்வளவு காலத்துக்குத்தான் உனக்கு நான் பஞ்சப்படி அளந்துக்கிட்டிருக்க முடியும்? எனக்குன்னு ஒண்ணும் கிடையாதா? சம்பாதிக்கிறதையெல்லாம் உங்களுக்கே கரைச்சுக்கிட்டு இருந்தால் என்னோட கதி என்ன ஆகிறது?''

தன் அண்ணனின் இந்தக் காரசாரமான பேச்சைக் கேட்டு வலம்புரி கொஞ்சம் கூட முகம் சுளிக்கவோ, வருத்தப்படவோ இல்லை. மாருக மலர் மாரி பொழியப்பட்டவன்போல் ஆனந்தமாகச் சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன்.

''இப்படியெல்லாம் கோமாளிச் சிரிப்புச் சிரிச்சு என்னை ஏமாற்ற முடியாதடா! கூடப் பிறந்த தோஷத்துக்காக உங்களுக்காக நான் என்னென்ன செய்யணுமோ அவ்வளவையும் செய்து என் கடமையை முடிச்சுட்டேன். இனிமேல் அவனவன் குடும்பத்தை அவனவன் எப்படியோ நடத்திக்கிட்டுப் போக வேண்டியது. இங்கே என் கையைச் சுரண்ட எவனும் எவளும் வரக் கூடாது. வந்தால் எதுவும் கிடைக்காது.''

நாற்காலியைப் பின்னால் வேகமாக நகர்த்திவிட்டு எழுந்தான் முத்துசிவன்.

வலம்புரியும் மெல்ல எழுந்து நின்று உள்ளார்ந்த பயத்துடனும் கூச்சத்துடனும் தன் அண்ணனை நிமிர்ந்து பார்த்தான். பிறகு வழக்கம்போல் வலது கையை நீட்டி விரல்களைக்

குவித்து, ''இல்லேண்ணு!... வந்து... அந்தப் பால்காரன் நேத்திக்கு....'' என்று ஏதோ சொல்ல வாயெடுத்தவன் தான் சொல்லப் போவதிலுள்ள தமாஷைத் தானே ரசிப்பவன் போல் தலையைச் சுழற்றிச் சிரித்தான். அந்தச் சிரிப்போடு தான் சொல்ல வந்ததையும் சொல்லியாகி விட்டது என்று

கோபப் படபடப்புடன் வராந்தாவில் உலாவத் தொடங்கிய முத்துசிவன் சட்டென்று நின்று, சற்றுத் தூரம் வரை சென்றுவிட்ட வலம்புரியை வெறித்துப் பார்த்தான். அவன் முகம் பேயறை பட்டது போல் வெளிறிச் சிறுத்தது. கண்கள் கலங்கிப் பனித்தன. சடாரென்று உள்ளே விரைந்து போய் 'ஹாங்கரி'ல் தொங்கிய தன் சட்டை ஜேபியிலிருந்து இருபத்தைந்து ரூபாய் எடுத்து, ''அம்மா! இதைக் கொண்டுபோய் அவனிடம் கொடுங்க!'' என்றான்.



திருப்திப்பட்டுக் கொண்டவன் மாதிரி மெல்லச் சிரித்துக் கொண்டே தன் அம்மாவிடமோ, அண்ணனிடமோ 'போரேன், வரேன்' என்று எதுவும் சொல்லாமல், படிகளில் இறங்கி வெளியே நடக்கலானான்.

இந்நேரம் கதவோரத்தில் ஒதுங்கி நின்று கொண்டிருந்த அன்னபூரணியம்மாள் அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு அரக்கப் பரக்கப் படிகளில் இறங்கி ஓடினாள். சோர்வும் களைப்புமாகச் சோபாவில் சாய்ந்து தலையைத்

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது — ஸன்லைட்




ஸன்லைட் சோப்பினால் சலவைசெய்து பார்த்தீர்களானால் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை: சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி! சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின்**
**சலவைக்குரியது ஸன்லைட்**

லின்டாஸ்-S. 63-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

தாங்கிப் பிடித்துக் கொண்டான் முத்துசிவன்.

சற்றைக்கெல்லாம் திரும்பி வந்த அன்னபூரணியம்மாள், ''அந்தச் சின்னப்பயலே நீ அப்படிக் கண்டிச்சது சரிதான் தம்பி! அப்படித்தான் அவன் வந்து உன்னைத் தொல்லைப்படுத்தாமல் இருப்பான்'' என்றாள் மெல்லச் சிரித்துக் கொண்டே.

தாயாரின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான் முத்துசிவன். உண்மையில் தனக்காக அவள் பரிந்து பேசுகிறாளா, அல்லது இளைய மகனுக்குப் பணம் கிடைத்து விட்டதால் ஏற்பட்ட சந்தோஷத்தை மறைப்பதற்காக இப்படிப் போலியாகத் தன்னோடு சேர்ந்து ஒத்துப் பாடுகிறாளா என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

''மணி பதினொன்றுக்கு மேல் ஆகிப் போச்சு! இனிமேல் அவன் வீடு போய்ச் சேர்ந்து சாப்பிடணும்; சாப்பிடறதுக்கு அங்கே ஏதாவது இருக்குமோ, இருக்காதோ!'' என்று தனக்குத் தானே முணுமுணுத்தபடி சமையலறையை நோக்கிச் சென்று விட்டாள் அன்னபூரணி. வலம்புரிக்கு உணவிட்டு அனுப்பாத குறை அவளுடைய அந்த முணுமுணுப்பிலிருந்து நன்கு வெளிப்பட்டது.

குற்றம் புரிந்தவன் போல் முகத்தைத் துண்டால் மூடிக் கொண்டு சிறிது நேரம் அப்படியே சோபாவில் சாய்ந்திருந்த முத்துசிவன் ஏதோ முடிவுக்கு வந்தவன் போல் ஓர் அலட்சியச் சிலும்பலுடன் நிமிர்ந்து உட்கார்ந்து சன்னலோரம் விழுந்து கிடந்த தினப் பத்திரிகையை எடுத்துப் பிரித்துப் படிப்பதில் தன் கவனத்தைச் செலுத்தலானான்.

யுனெசெஃப் ஸ்தாபனத்திடம் உலக உணவுத் திட்டத்தின் கீழ் கால் நடைத் தீவனத்துக்காக இந்திய சர்க்கார் செய்து கொண்ட எட்டாவது ஒப்பந்தம் பற்றிய ஒரு செய்தியை வெகு கவனமாகப் படித்து முடித்த முத்துசிவன் அடுத்த பக்கத்தைப் புரட்டினான். அதிலே மூன்று 'காலம்', ஆறு அங்குல சதுரத்துக்கு ஒரு பகுதி வெட்டப்பட்டு விட்டிருந்தது!

வியப்பால் புருவங்கள் நெற்றி மேட்டுக்கு ஏற அந்தப்பக்கத்தை வெறித்துப் பார்த்த அவன், 'சரிதான் விஷமக் காரியத்தை வலம்புரிதான் செய்திருப்பான்' என்று தீர்மானமாக எண்ணித் தலையாட்டிக் கொண்டான்.

'அவன் ஏன் இப்படிச் செய்ய வேண்டும்? இதிலே அவனுக்கு வெட்டி எடுக்கவோ, கத்தரித்து அகற்றவோ அந்தளை முக்கியமான பகுதி என்ன இருந்திருக்கும்?'

குழப்பத்துடன் அந்தப் பக்கத்தை முன்னும் பின்னுமாகப் புரட்டிப் பார்த்த முத்துசிவனின் கவனத்தை வேறோர் இடத்தில் வெளியாகியிருந்த செய்தி ஒன்று வெட்டிக் கவர்ந்தது. ஒரு பிரபலமான நடிகையைப் பெரிய தொழிலதிபர் ஒருவர் திமோர்த் திருமணம் செய்து கொண்ட சுவையான செய்தி அது.

அந்தச் செய்தியைப் படித்ததும் அவனுடைய சிந்தனை இந்தக் 'கத்தரிப்பு' விஷயத்தை அப்படியே விட்டு விட்டு நடிகை வந்தனாவை எண்ணிப் பார்ப்பதில் திரும்பியது.

இன்று அவன் அவளது வீட்டிலிருந்து புறப்படும்போது 'போய் வரட்டுமா?' என்று கேட்டதற்கு அவள் 'வேண்டாம்' என்பது போல் குறும்பாகச் சமிக்ஞை காட்டிச் சிரித்ததை இப்போது நினைத்துக் கொண்டான்.

'சும்மா வெறும் கேலிக்காக மட்டுமா அப்படிச் செய்திருப்பாள்? அல்லது நிஜமாகவே என்னைப் போக வேண்டாம் என்று தடுத்தாளா? ஒருகால், இன்று போய் நாளை அவசியம் வாருங்கள் என்று சொல்லாமல் சொல்லி உணர்த்துவதற்காக அவ்வாறு அபிநயத்திருப்பாளோ? ஆமாம்; இந்த அர்த்தத்தில்தான் அவள் அப்படிச் சமிக்ஞை காட்டியிருப்பாள்! இல்லையானால், இன்று நான் அவளைப் பார்க்கப் போயிராவிடில் அவளே என்னைப் பார்க்க என் வீடு தேடி வர இருந்ததாகச் சொல்வாளா?'

சற்று முன் அவனுக்கு ஏற்பட்டிருந்த கோபம், வெறுப்பு, வருத்தம் ஆகிய உணர்ச்சிகளெல்லாம் அடியோடு மறைந்து ஓர் இன்பக் குறுகுறுப்புக்கு ஆளானவனாய்த் தன் கையிலிருந்த பத்திரிகையை வீசி எறிந்துவிட்டு எழுந்து வெகு உல்லாசமாகச் சினிமாப் பாட்டு ஒன்றை 'ஹம்மிங்' செய்தவாறு படுக்கையை நோக்கி நடந்தான்.

கடந்த ஏழெட்டுத் தினங்களாக ஒரு கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டு தனியாய்த் தவித்துக் கொண்டிருந்தாள் அன்னபூரணியம்மாள். அது அவளின் மூத்த மகள் ஞானமியிடமிருந்து வந்த கடிதம். அக்கடிதத்தில் அவள் பல ஆண்டுகளாக ஆவலோடு எதிர்பார்த்த நல்ல சேதி ஒன்று வந்திருந்தது. ஆமாம்! ஞானமி ஐந்து மாதங்களாய் 'முழுகாமல்' இருக்கிறாளாம்!

அவளுக்குத் திருமணமாகிக் கிட்டத்தட்ட பத்தாண்டுகள் ஆகிவிட்டன. இதுகாறும் பிள்ளைப் பேறின்றி எல்லாருடைய மனத்திலும் ஏக்கத்தை வளர்த்து விட்டிருந்த அவள் இப்போதுதான் 'வாயும் வயிறுமாகி'யிருக்கிறாள். எவ்வளவு மகிழ்ச்சி யடைய வேண்டிய விஷயம் இது! இந்தச் சந்தோஷ சமாசாரத்தைத் தன் பிள்ளை முத்துசிவனிடம் தெரிவிக்கச் சந்தர்ப்பம் கிடைக்காமல்தான் அப்படித் தவித்துக் கொண்டிருந்தாள் அன்னபூரணி.

அவள் ஏன் அவனிடம் சொல்ல வேண்டும்? அவனல்லவா முதலில் அதைத் தெரிந்து கொண்டிருப்பான்? அதாவது, ஜானகியோ, மைதிலியோ, தில்லைநாதனோ மற்ற உறவினர்களோ அவனுடைய பெயருக்குத்தான் கடிதம் எழுதுவது வழக்கமாதலால் அவனே முதலில் கடிதத்தைப் படித்து முக்கியமான விஷயம் ஏதேனும் இருந்தால் தன் அம்மாவிடம் தெரிவிப்பான்!

வாஸ்தவம். ஆனால் அந்த வழக்கமான நடைமுறை இப்போது முதல் முறையாக மாறி யிருக்கிறது. ஜானகி தன் அண்ணன் பெயருக்குக் கடிதம் எழுதாமல் அம்மாவின் பெயருக்கு எழுதியிருந்தாள். காரணம் இல்லாமலா?——

ஜானகி தன் தங்கை மைதிலியின் திருமணத்துக்கு வந்து போனதிலிருந்து அண்ணன் முத்துசிவனுக்குப் பல கடிதங்கள் எழுதி விட்டாள். எல்லாம் வெறும் க்ஷேம லாபங்களைக் கேட்டும் தெரிவித்தும் எழுதிய கடிதங்கள்தாம் என்றாலும் அவை ஒன்றுக்குக்கூட அவன் பதில் கடிதமே எழுதவில்லை. அவளுக்கு மட்டும்தானா? மைதிலியினுடையவும், தில்லைநாதனுடையவும் கடிதங்களுக்கும் பதில் போடுவதில்லை. அம்மாவே ஞாபகப்படுத்தினாலும் 'எழுதுகிறேன்' என்று தலையாட்டுவான்; ஆனால் எழுதமாட்டான். சிலசமயம் 'கடிதம் எழுத எங்கேம்மா எனக்கு நேரம் இருக்கிறது? மெள்ள எழுதலாம்! அவசரம் ஒன்றுமில்லை!' என்று சொல்லி விடுவான்.

இந்நிலையில்தான் ஜானகி இந்த முக்கியமான கடிதத்தைத் தன் அம்மாவுக்கு எழுதியிருக்கிறாள். நியாயம் தானே?

அன்னபூரணியம்மாளுக்குப் பரம சந்தோஷம். தனக்கு ஒரு பேரப்பிள்ளை வரப் போகிறது என்பதால் ஏற்பட்ட சந்தோஷம் அது. ஆனால் அச் சந்தோஷத்தை அவள் இன்னும் பூரணமாக்கிக் கொள்ளவில்லை. வீட்டுக்குத் தலைவனை தன் பிள்ளையிடம் அவ்விவரத்தைத் தெரிவித்து அவன் அடையும் மகிழ்ச்சியைப் பார்த்தால்தானே அவளின் மகிழ்ச்சி நிறைவுறும்?

இதற்காக அவள் ஒவ்வொரு தினமும் அந்தச் சுபச் செய்தியை அவனிடம் தெரிவிக்கச் சமய சந்தர்ப்பத்தை எதிர்பார்க்கிறாள். கடிதம் வந்து இதோ, ஏழெட்டுத் தினங்களாகியும் அதற்குரிய வாய்ப்பே அவளுக்குக் கிட்டவில்லை.

ஆமாம்; வந்தவளைப் பார்த்து விட்டு வந்த மறு நாளிலிருந்து முத்துசிவன் வீட்டில் கொஞ்ச நேரமும் தங்குவதில்லை. ஆபீஸிலிருந்து வந்தவுடனேயே ஏதோ ராஜாங்கக் காரியத்தைக் கவனிக்கப் போகிறவன்போல் வெளியே புறப்பட்டுப் போய் விடுவான். வீடு திரும்ப இரவு ஒன்று, இரண்டு மணிக்கு மேல் ஆகிவிடும். மறுநாள் காலை ஒன்பது மணி வரையில் அடித்துப் போட்டாற் போல் தூங்குவான். அப்புறம் அரக்கப் பரக்க எழுந்து குளித்து விட்டு மற்ற காரியங்களையும் அரை குறையாகக் கவனித்துக்கொண்டு ஒன்பதரை மணிக்கெல்லாம் ஆபீசுக்குப் பறந்து விடுவான். சில தினங்களில் ஆபீசிலிருந்து மாலை வீட்டுக்கு வருவதுமில்லை. சனி, ஞாயிறு பகல் போதுகளிலோ வீட்டில் இருப்பதே இல்லை. எனவேதான் அன்னபூரணியம்மாள் அந்த நல்ல சமாசாரத்தைப் பிள்ளையாண்டானிடம் தெரிவிக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்கும் ஒரு நாள் பொறுமை எல்லை மீறிவிடவே, அன்று மாலை ஆபீஸிலிருந்து வந்தவுடன் அவசரம் அவசரமாக டிரஸ் பண்ணிக்கொண்டு காப்பி — டிபன்கூடச் சாப்பிடாமல் வெளியே செல்லக் கிளம்பிய முத்துசிவனை இழுத்துப் பிடித்து நிறுத்தாத குறையாக எதிரே போய் நின்று, ''இந்தக் கடிதாசியைப் பார்த்தாயா தம்பி? ஜானகி எழுதியிருக்கிறாள்!'' என்று மகிழ்ச்சி கலந்த புன்னகையுடன் கூறியவாறு கடிதத்தைக் கொடுத்தாள். அந்தக் கடிதம் அவனுடைய பெயருக்கு எழுதப்படாமல் தன் பெயருக்கு எழுதப்பட்டிருப்பதைக் கண்டு அவன் வருத்தமோ கோபமோ அடைவானோ என்ற பயம் வேறு அவளை உள்ளூற உருட்டிப் புரட்டியது.

முத்துசிவன் கடிதத்தைப் படித்து முடித்தான். அவன் முகத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. யாரோ மூன்றாம் மனிதர் ஒருவருக்கு வந்த சந்தோஷச் செய்தியைக் கேள்விப் படுகிறவன் மாதிரி இலேசாகப் புன்முறுவல் பூத்துத் தலையசைத்துக்

# செட்டிநாடு

பிராண்ட்

## போர்ட்லண்ட் சிமெண்ட்




செட்டிநாடு
பிராண்ட் சிமெண்ட்
உபயோகித்து இலாப
மடையுங்கள். கட்டுமானச்
செலவைக் குறையுங்கள். நவீன
முறையில், கடுமையான தரக் கட்டுப்
பாட்டின் கீழ் தயாரிக்கப்படுவது
செட்டிநாடு பிராண்ட் சிமெண்ட்.

பட்டுப்போன்ற மென்மை!
உருக்கு போன்ற உறுதி!

இப்பொழுது
எல்லா இடங்களிலும்
தாராளமாகக் கிடைக்கிறது

# செட்டிநாடு

பிராண்ட்

## போர்ட்லண்ட் சிமெண்ட்

தயாரிப்பவர்கள்:
செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்
பதிவு அலுவலகம்: சென்னை-1
தொழிற்சாலை: புளியூர் (கரூர்)

சோல் செல்லிங் ஏஜெண்டுகள்:
செட்டிநாடு ஏஜென்ஸீஸ் பிரைவேட் லிமிடெட்
5, அரண்மனைக்காரத் தெரு—சென்னை-1

Chari-I

கொண்டே: ''ம்...நல்லபடியா நடக்கட்டும்!'' என்று முணு முணுத்தவாறு கடிதத்தை மடித்து அம்மாவிடமே கொடுத்துவிட்டுப் புறப்படத் திரும்பினான்.

அன்னபூரணி யம்மாளுக்கு இது அதிர்ச்சியுடன் கூடிய பெரிய ஏமாற்றமாகிவிட்டது. உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''நடக்கிறது இருக்கட்டும் தம்பி! இப்ப நடக்க வேண்டியதுக்கு என்ன சொல்லறே?'' என்றாள்.

''என்னம்மா செய்யணும் என்கிறீங்க?''

''தங்கச்சிக்குக் கடிதாசி போட வேணுமா?''

''போட்டாப் போச்சு. உடம்பைக் கவனிச்சுப் பார்த்துக்கோன்னு எழுதணும், அவ்வளவுதானே?''

அன்னபூரணி யம்மாளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. ''அதுமட்டும் எழுதினாப் போதுமா?'' என்றவாறு மீண்டும் சிரித்தாள் அவள்.

''வேறே என்ன எழுதணும்?''

ஒரு விநாடி மௌனமாயிருந்த அன்னபூரணி இளநகையுடன் சொன்னாள்: ''கல்யாணமாகி ரொம்ப வருஷமாகிப் போனாலும் ஜானகி இப்பத்தான் தலைப் பிள்ளைக்கு உண்டாகியிருக்கிறாள். அதனால் அவளுக்கு, ஏழாம் மாசம் வளைகாப்பு, சீமந்தம் பண்ணி வீட்டுக்கு அழைக்கணும்.''

''வீட்டுக்கு அழைச்சு...?''

''நாம்தான் பிரசவம் பார்த்து, உடம்பைத் தேற்றித் தாயும் பிள்ளையுமாகப் புக்ககம் அனுப்பி வைக்கணும்.''

''ஓகோ! ஏம்மா, இதையெல்லாம் நீங்க யோசனை பண்ணித்தானே பேசறீங்க?'' என்று கடுப்புடன் கேட்டான்.

அன்னபூரணியம்மாள் மகனின் முகத்தைப் பார்த்தாள்.

''பின்னே என்னம்மா! வளைகாப்பு, சீமந்தம், பிரசவம், புண்ணியாகவாசனம், உடம்பைத் தேற்றுகிறது, வழி கூட்டி அனுப்பறது—இதுகளுக்கெல்லாம் நான் பணத்துக்கு எங்கே போவேன்? வெறுங்கையால் முழம் போட முடியுமா? மகளை அழைச்சுக்கிட்டு வரணும்னு ரொம்பச் சுலபமாகச் சொல்லிவிட்டீங்களே!''

வெலவெலத்துப் போன அன்னபூரணி, ''நீ சொல்றது சரிதான் தம்பி! ஆனாலும் பணம் இல்லேன்னு நாம் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமல் இருந்துவிடலாமா? அப்படி இருந்துவிட்டால் ஊர் உலகம் பேசறது ஒரு பக்கம் இருக்கட்டும்; அந்தப்

## பெருந்தன்மை!



சிறைவாசம் புரிந்த காந்திஜியைச் சிறையில் பேட்டி காண்பதற்கான அனுமதியை பாவுக்கு அரசாங்கம் அளித்தது. பா இரண்டு மூன்று தடவை காந்திஜியைப் பேட்டி கண்டார். பிறகு ஒருமுறை சென்றபோது காந்திஜியிடம் பா சொன்னார்: ''நான் இனிமேல் இங்கு வந்து உங்களைப் பேட்டி காண்பதை நிறுத்திக் கொள்ள விரும்புகிறேன். பல்லாயிரக் கணக்கான தொண்டர்கள் சிறைவாசம் செய்கிறார்கள். சிலர் உடல் நலிவுற்றபோது கூட, அவர்களைப் பார்க்க விரும்பும் சுற்றத்தார்களுக்கு அனுமதி வழங்க சர்க்கார் மறுத்து விட்டார்கள். அவர்களுக்குக் கிடைக்காத சலுகை எனக்குக் கிடைத்திருக்கிறது. இதை இனிமேல் பயன்படுத்தாமல் இருப்பதே உசிதம் என்று நினைக்கிறேன்.'' காந்திஜியும் அதை ஒப்புக்கொண்டார்.

— கே. எஸ். ஜே.

பெண்ணின் மாப்பிள்ளை வீட்டார் என்ன நினைப்பாங்க? பேசுவாங்க? எங்கும் நடக்கிற சம்பிரதாயமான காரியங்களை நாம் மட்டும் எப்படித் தட்டிக் கழிச்சுட முடியும்? நமக்கு அது கேவலம் இல்லையா?'' என்றாள்.

முத்துசிவனுக்குக் கோபம் வெடித்துக்கொண்டு வந்து விட்டது. ''இங்கே பாருங்கம்மா! பதினைஞ்சு வருஷங்களுக்கு முன்னால் செத்துப் போனாரே என் அப்பா, அவர்கிட்ட நீங்க சொல்ல வேண்டியதை என்கிட்டச் சொல்றீங்க. இப்படிச் சொல்றதிலே கொஞ்சம் கூட அர்த்தமில்லே; நியாயமுமில்லே. சம்பிரதாயம், சடங்கு, கடமை இதுகளெல்லாம் அப்பன் முன்னின்று நடத்துற கல்யாணங்களுக்குத் தான் பொருந்தும். உங்க பிள்ளைகளையும் பெண்களையும் வளர்த்து, படிக்க வைச்சு ஒவ்வொருத்தருக்கும் கல்யாணம் பண்ணிக் குடியும் குடித்தனமுமாக வைக்கிறது வரையில்தான் பொறுப் பேற்றுக்கிட்டேன். அந்தப் பொறுப்பை ஊர் உலகமே மெச்சுகிற மாதிரி நிறைவேற்றியும் முடிச்சுட்டேன். இதற்கு மேல் சாங்கியம், சம்பிரதாயம், அது இதுன்னு எதையும் என்கிட்டச் சொல்லாதீங்க. நானும் உங்க வயிற்றில் பிறந்த பிள்ளைதான் என்கிறதை ஞாபகப்படுத்திக்கிட்டு என்னைக் கொஞ்ச காலத்துக்கு நிம்மதியாக இருக்க விடுங்க.'' இவ்வாறு இரைந்து சொல்லிக் கொண்டே விரைந்து போய் ஸ்கூட்டரில் ஏறிப் பறந்து விட்டான் முத்துசிவன்.

**(தொடரும்)**

# பாலூஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

*(ஸ்தாபிதம் : 1947)*

''விஷ்ணு விகார்'', 17-A, ஃபீனாங்க் ரோடு

ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்

சயான் (கிழக்கு) பம்பாய் - 22 D. D.

டெலிபோன் : **471455** - தபால் பெட்டி: **6759** - தந்தி: GROWRICH

கீழ்க்கண்ட எல்லா வகுப்புகளுக்கும் புதிய குரூப்புகள் பிப்ரவரி 1969க்கு ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன.

நீண்ட காலம் : 50 மாதங்கள் : ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

| வகுப்பு | தவணை ரூ. | காலம் | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|---|
| LTC | 200/- | 50 மாதங்கள் | 10,000/- |
| LTA | 100/- | 50 மாதங்கள் | 5,000- |
| LTB | 50/- | 50 மாதங்கள் | 2,500/- |
| LTD | 20/- | 50 மாதங்கள் | 1,000/- |

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ளது

குறுகிய காலம் : 25 மாதங்கள்

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| A | 200/- | 5,000/- |
| B | 100/- | 2,500/- |
| C | 50/- | 1,250/- |
| F | 25/- | 625/- |
| G | 20/- | 500/- |

நீண்டகாலம் : 40 மாதங்கள்

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| E | 500/- | 20,000/- |
| F | 250/- | 10,000/- |
| G | 125/- | 5,000/- |

வேலை நேரம் : { காலை 8 மணி முதல் 10-30 மணி வரை
மாலை 4 மணி முதல் 7-30 மணி வரை }

**வார விடுமுறை : திங்கட்கிழமை**

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :

'' பாலூஸேரி பில்டிங்ஸ் ''

3, சிங்கராச்சாரி தெரு — திருவல்லிக்கேணி — சென்னை - 5

கிளைகள் : பெங்களூர் - கல்கத்தா - புதுடெல்லி

பிரகடனம் இலவசம்

சிட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை



# வேள்வி

தபஸ்வி

அக்கினிகர்ப்ப முனிவருடைய ஆசிரமம், பரத்வாஜ முனிவரது ஆசிரமத்திலிருந்தும் கூப்பிடு தொலைவில் இருந்தது. உலக க்ஷேமத்தை முன்னிட்டு வேள்வி யொன்று செய்ய வேண்டுமென்று வெகு நாட்களாகத் திட்டமிட்டிருந்தார் அக்கினிகர்ப்பர். ஒரு நாள் அதைப் பற்றி, பரத்வாஜ முனிவருடன் பிரஸ்தாபித்தார்.

அதைக் கேட்ட மகரிஷி பரத்வாஜர், தாமே அந்தப் புனித வேள்வியை முன்னின்று நடத்திக் கொடுப்பதாக வாக்களித்திருந்தார். அதனால் மட்டற்ற மகிழ்ச்சியடைந்த அக்கினிகர்ப்ப முனிவர், அந்தச் சந்தோஷச் செய்தியைத் தம் மனைவி சாம்பவியிடமும் தெரிவித்தார்.

''வேள்வித் தீயை வளர்க்க நிறைய நெய் வேண்டியிருக்குமே? என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்றாள் சாம்பவி.

''ஆமாம்! இப்போதிருந்தே அதற்காகச் சேகரித்து வைத்தால்தான் முடியும். அதனால்தான் உன்னிடம் சொல்கிறேன். அக்கம் பக்கத்து ஆசிரமங்களிலே கேட்டு, கொஞ்சம் கொஞ்சமாகச் சேகரித்து வைக்க வேண்டும்'' என்றார் அக்கினிகர்ப்பர்.

சில நாட்களில் அக்கினிகர்ப்ப முனிவருடைய சிஷ்யர்கள் தேவைக்கு அதிகமான சமித்துகளைக் கொணர்ந்து குவித்து விட்டார்கள். சாம்பவி தேவியும் வேண்டிய அளவு பசு நெய்யைச் சேமித்திருந்தாள். வேள்விக்குக் குறிப்பிட்டிருந்த முகூர்த்தம் நெருங்கிக் கொண்டிருந்தது.

அக்கினிகர்ப்ப முனிவரின் ஆசிரமத்துக்குச் சுமார் இரண்டு யோசனை தூரத்தில், ஆரண்யத்தின் மத்தியில் ஒரு பெரிய வீடு இருந்தது. ஆனால் ஆசிரமத்தைப் போல் இங்கு மயில்கள் தோகை விரித்தாடவில்லை. புள்ளினங்கள் இனிய குரல் எழுப்பவில்லை. மான் கூட்டங்கள் அங்கு வரவே அஞ்சின. ஒன்றிரண்டு வழி தவறி வந்தபோதிலும் அவை மீண்டும் திரும்பா!

விருபாட்சன் என்ற அரக்கனின் இருப்பிடம்தான் அது.

''இன்று யாரோ ஓர் இளைஞன் வந்திருந்தாற் போலிருந்ததே? யார் அவன்?'' என்று அவன் தன் மனைவி சுகந்தியை வினவினான்.

''இளைஞனா? நாளுக்கு நாள் உங்கள் பார்வையின் தீட்சண்யம் நன்றாய்த்தான் இருக்கிறது! வந்திருந்தது அக்கினிகர்ப்பருடைய மனைவியாக்கும்'' என்று தெரிவித்தாள் சுகந்தி.

''அவள் எதற்காக இங்கு வந்திருந்தாள்?''

''அவர்களை நான்தான் வரச் சொல்லியிருந்தேன். அன்றைக்கு ஒரு நாள் ஆற்றங்கரையில் கண்டபோது 'கொஞ்சம் பசு நெய் கிடைக்குமா' என்று கேட்டாள். நம்மிடம்தான் ஏராளமான பசுக்கள் இருக்கின்றனவே; 'வந்து என்ன வேண்டுமாயினும் வாங்கிக் கொள்ளேன்' என்று கூறியிருந்தேன். அதற்காகத் தான் வந்திருந்தாள்.''

''பசு நெய் அவர்களுக்கு எதற்கு என்று விசாரித்தாயா?''

''உங்களைப் போல் அதையெல்லாம் அலைவுகமாய் நான் கேட்க மாட்டேன். ஏதாவது செலவிருக்கும்.''

விருபாட்சன் ஒருகணம் யோசித்தான்.

''சரிதான்! அக்கினிகர்ப்பர் ஏதோ யாகம் செய்கிறார் போல் தெரிகிறது. அதற்காகத்



தான் கேட்டிருக்க வேண்டும். ஆமாம், அவனுக்கு நீ ஏன் நெய் கொடுத்தாய்?''

''அவர்கள் ஏதாவது செய்யட்டுமே! நமக்கு என்ன அதனாலே நஷ்டம்?''

''நஷ்டம் மட்டுமில்லே, கஷ்டமும்கூட! இந்த வார்த்தை இராவணேசுவரனுடைய காதுக்கு எட்டினால் என்ன நடக்கும் தெரியுமா? வேறு வினையே வேண்டாம்! தன்னுடைய ஆதிபத்தியத்தின் கீழுள்ள ஆரண்யத்திலே ஒரு யாகம் நடந்து, அதை நாம் தடுக்காமல் போனால்....''

''தலை போய் விடுமோ! நீங்கள் பேசாமல் இருங்கள். அவள் எவ்வளவு நல்லவள் தெரியுமா? அவள் ஓர் அழகான கமண்டலம் கொண்டு வந்திருந்தாள். அது முனிவருடையதாம்! அதுபோல் எனக்கொன்று வேண்டும் என்று கேட்டேன். அவருடைய கணவர் அடுத்த முறை அயோத்திக்குப் போகிற போது, எனக்கும் அது மாதிரி ஒரு கமண்டலம் தருவித்துக் கொடுப்பதாகச் சொன்னாள். அவர்கள் யாகம் பண்ணும்போது உங்கள் வழக்கப்படி போய் அதில் மது, மாமிசங்களைக் கொட்டி வைக்காதீர்கள், பாவம்!''

''அதெல்லாம் சரி, சுகந்தி! அதற்காக ராஜ காரியத்தை நிறுத்த முடியுமா? நம் கடமையை, நம் குலாசாரத்தை.....''

''நல்ல கடமை! நல்ல குலாசாரம்!.... இப்படியெல்லாம் நல்லவர்கள் மனசை நோக வைக்கலாமா? அதனால்தானே உங்களுக்குச் சாபம் கிடைக்கிறது. கண் தெரியாமல் போகிறது?''

''சாபமாவது, கோபமாவது! என்னைச் சபிக்கக்கூடிய சக்தி யாருக்கு உண்டு? அவர்களைப் பூண்டோடு ஒழித்து விடமாட்டேனா?'' என்று விருபாட்சன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்துக் கொண்டே சொன்னான். ''எனக்குக் கண் தெரியாமல் என்ன? வீட்டையெல்லாம் நீ இருட்டாக்கி வைத்திருக்கிறதனாலே சில சமயங்களில் தடுமாறி விடுகிறது, அவ்வளவுதானே?'' என்றான்.

''எதற்கெடுத்தாலும் என் மேல் பழி போடத்தான் உங்களுக்குத் தெரியும். அன்றைக்குப் பட்டப் பகலில் ஒரு நாள், ஆட்டுக் குட்டியை நம் குழந்தை என்று நினைத்து நீங்கள் எடுத்துக் கொள்ளவில்லையா?....''

''பொழுதுக்கும் அதையே சொல்லிக் கொண்டிராதே! ஆட்டுக்குட்டி மாதிரி உன் மகன் அன்னிக்கு நாலு காலில் தவழ்ந்து வந்ததனாலே எனக்கு இனம் புரியல்லே! அது இருக்கட்டும்; பரத்வாஜ ரிஷிகளிடம் போய் இம்மாதிரி கண் நோய்களுக்கு மாற்று மருந்து அறிந்து வரும்படி உன்னிடம் சொல்லியிருந்தேனே, கேட்டு வந்தாயா?''

''அவரைக் கேட்டேன். இதன் பெயர் க்ஷீணதிருஷ்டியாம்'' என்றாள்.

''திருஷ்டியாவது, சிருஷ்டியாவது!.... சரி சரி, அதற்கு என்ன மருந்து சொன்னார்?''

''உன் கணவனிடம் சொல்லு என்று அவரே சொன்னார். நான் உங்களுக்கு என்று கேட்கவில்லை; இருந்தாலும் அவரே சொன்னார். 'உன் கணவரிடம் சொல்லு. தினமும் காலையிலே எழுந்து குளிர்ந்த நீரில் ஒரு முறையாவது குளிக்க வேண்டும். மது, மாம்சாஹாரங்களை இனியாவது சாப்பிடாமல் இருக்க வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக உஷ்ணம் தணிந்து நாளடைவில் குணம் ஏற்படும்' என்றார்.''

''அதிகப் பிரசங்கி! மருந்தைக் கேட்டால் உபதேசம் செய்கிறானா? இருக்கட்டும், யாகத்துக்கு அவனும்தானே வருவான்? கவனித்துக் கொள்கிறேன்'' என்று உறுமினான்.

''ஆமாம், ஏன் இப்படி உறுமுகிறீர்கள்? அவரைப் போய்க் கேட்டதாலே அவருக்குத் தெரிந்ததைச் சொன்னார். அவரை எதற்காகத் திட்டுகிறீர்கள்? இது கண் முழுதும் தெரியாமல் போகிறதுக்குத்தான் வழி.''

''நீ பேசாமல் இரு. உனக்கொன்றும் தெரியாது.''

'என் குழந்தைக்கும் ஆட்டுக் குட்டிக்குமாவது உனக்கு வித்தியாசம் தெரிகிறதே' என்று தனக்குள் எண்ணிக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தாள் அவள்.

**வா**க்களித்தபடி யாக நாளன்று, அக்னி கர்ப்பமுனிவருடைய ஆசிரமத்துக்குப் பரத்

---

### நெஞ்சைத் தொட்ட நிகழ்ச்சி

இந்தப் புகைப்படத்தில் உள்ளவர்கள் வெயில் காரணமாகக் கண்ணை மூடிக் கொள்ளவில்லை. பாவம்! அவர்கள் பிறவியிலேயே பார்வையை இழந்தவர்கள்; படத்தின் நடுவே நிற்கும் ஆசிரியை தவிர. அவர்களுக்குப் படம் எடுத்துக் கொள்வதிலே பரம சந்தோஷம். திருச்சியில் உள்ள 'விழி இழந்தோர் பள்ளி'ப் பிள்ளைகளான இவர்கள் படமெடுத்தவுடன் கேட்ட கேள்வி என்ன தெரியுமா? ''எங்களுக்கென்று ஒரு போட்டோப் பிரதி தருவீர்களா?''

''தருகிறேன். எப்படிப் பார்ப்பீர்கள்?'' என்று கேட்டதற்கு, ''தொட்டுப் பார்ப்போம்!'' என்றார்கள். இது என் நெஞ்சை மிகவும் தொட்டது.

— புஷ்பத்துறை சுப்ரமண்யம்



சிக்கு பிடிக்காத,

எண்ணெய் வழியாத கூந்தல் டானிக்

# கால்கெமிகோலின்
# காந்தாரிடின் ஹேர் ஆயில்
# காந்தரால்

ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்

**அழகிய புதிய**
**அட்டைப்பெட்டியில்**
**காந்தரால்**
**கிடைக்கும்**






இது ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

CCK-4765 TM

வாஜ முனிவர் எழுந்தருளியிருந்தார்: அவருடன்கூட யாகசாலையெங்கும் ஊசிமுனை அளவும் இடமின்றி, வேறு பல முனிவர்களும், ரிஷிபத்தினிகளும், புரோகிதர்களும் நிறைந்து, வேள்வித் தீயோடு அந்த ஆசிரமத்தின் புனிதத்தையும் வளர்த்துக் கொண்டிருந்தனர். எந்த நிமிஷத்திலும் அரக்கர் எந்தத் திசையிலிருந்தும் வரக்கூடும்; அதற்குள் எப்படியாவது வேள்வியை வெற்றிகரமாக முடிக்க வேண்டும் என்பதுதான் அப்போது அங்கிருந்த எல்லாருடைய ஒரே நெறியும், குறியுமாக இருந்தது. ஆனால் நல்ல குறிக்கோள்களுக்குத்தானே இடையூறு எப்போதும் வரும்?

அவர்கள் பயம் வீண் போகவில்லை.

வெண்கலக் கடையில் யானை நுழைந்தாற்போல் திடீரென்று தன் தோழர்களுடன் அட்டகாசமாய் ஆசிரமத்துள் பிரவேசித்த விருபாட்சன், வாசலில் நின்றிருந்த இரு சிஷ்யர்களைக் காலால் உதைத்துத் தள்ளினான். யாகசாலை உடனே பரபரப்புக் கண்டது.

''தீமையை விளைவிக்கும் தீயோர் ஃஅழிவார்களாக'' என்று அப்போது அக்னிகர்ப்ப முனிவர் கூற, அதை ஆமோதிப்பவர்கள் போல் பரத்வாஜரும், மற்ற மகரிஷிகளும் வேள்வித் தீயில் நெய்யை ஆகுதியாகச் சுரந்த காட்சி அவனை வால் மிதிபட்ட பாம்பாக வெகுண்டெழச் செய்தது.

''ஓஹோ ! அப்படியா?'' என்று கறுவியபடி கடகட வென்று சிரித்தவன் ஒரே எட்டில் வேள்வித் தீயருகில் பாய்ந்து, ''எங்கள் தலைவன் இராவணேசுவரன் வாழ்க !'' என்று இடிக் குரலில் முழக்கி விட்டுத் தன் கையிலிருந்த தண்ணீர் நிறைந்த மண்கலம் ஒன்றை ஹோமகுண்டத்தின் மேல் அப்படியே கவிழ்த்தான்.

''சிவ, சிவா!'' என்று முனிவர்களெல்லாம் அந்த அநீதியைப் பார்க்கச் சகியாமல் கண்களை மூடிக் கொண்டனர். அந்த ஒரு கணத்தில் அவர்கள் உயிரே துடிதுடித்துப் போயிற்று. இதயங்கள் கண்ணீர் உகுத்தன. செய்வகை அறியாமல் ஆவி பறந்த உள்ளத்தின் அவலமாய் அவர்களெல்லாம் ஸ்தம்பித்துவிட்ட நிலையில் —

என்ன ஆச்சரியம் ! முனிவர்களும், அரக்கர்களும் எதிர்பார்க்காத ஓர் அதிசயம் அங்கே நிகழ்ந்தது. தண்ணீர் நிறைந்த கலயத்தை விருபாட்சன் அக்னியில் கவிழ்த்தவுடன் சட்டென்று வேள்வித் தீ அணைந்து விடவில்லை. அதற்குப் பதில் வேள்வியின் ஜ்வாலை இரட்டிப்பாகி, முன்னிலும் அதிகமாய் அதன் தீ நாக்குகள் 'குபீர்' என்று நீண்டு மேலெழும்பின.

'என்ன மாயம் ! இது ஏதோ தேவர்களின் சூதாகத்தான் இருக்க வேண்டும். நானே இதை எப்படியும் இலங்கேசுவரனிடம் தெரிவித்து, இதற்கொரு முடிவு காணாமல் விடுவதில்லை' என்ற சங்கற்பத்துடன் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான் விருபாட்சன்.



''பாவம் சார் நீங்க. ஆபீசில் தூங்கிட்டு இருந்ததற்காக உங்களை 'டிஸ்மிஸ்' செய்துட்டாங்களாமே ?''

''ஆமா சார். நல்லா தூங்கிட்டு இருந்தவனை எழுப்பி அநியாயமா தூக்கத்தைக் கெடுத்துட்டாங்க சார் !''

---

அதன்பின் முனிவர்கள் யாகத்தை எந்த வித இடையூறுமின்றி வெற்றிகரமாக முடித்தனர். அளவற்ற உவகையிலே அக்னிகர்ப்பர் ஆனந்தக் கடலாடினார்.

ஃ ஃ ஃ

வேள்வியைக் கலைக்கும் முயற்சியில் தோல்வியுற்று வீடு திரும்பினான் விருபாட்சன். அவன் மனம் அமைதியிழந்து தவித்துக் கொண்டிருந்தது. 'ராவணேசுவரனுடைய பெயரை உச்சரித்து வேள்வியில் தண்ணீரைக் கொட்டிய போதிலும், அது ''ஹவிஸ்'' ஆக எப்படி மாறியது' என்பதுதான் விளங்காப் புதிராக அவன் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது.

குழம்பிய மனத்துடன் உள்ளே நுழைந்தவன் காதுகளில் மனைவியின் குரல் கேட்டது. வந்ததும் வராததுமாய் அவள் தன் கணவனிடம் முறையிட்டாள்.

''பார்த்தீர்களா, இந்த அநியாயத்தை ! வர வர வீட்டுக்குள்ளேயே திருடர் பயம் அதிகமாகி விட்டது. காலையிலே இங்கே, இந்த மூலையில் மண் கலயம் நிறையப் பசு நெய் வைத்திருந்தேன். இப்போது பார்த்தால் அந்தக் கலயத்தையே காணோம்! யாரைக் கேட்டாலும் 'தெரியாது' என்கிறார்கள். அது எப்படி மாயமாய்ப் போய் விடும்?....'' என்றாள்.

விருபாட்சன் பேசவில்லை. பேசாமல் கண்களைக் கசக்கிக் கொண்டே உள்ளே போனான். வேறென்ன செய்ய ?

# எவராலும் நெருங்கமுடியாத முதலிடம்




★ கச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ முரமுரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு




# க்ளுகோ

பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

# குழந்தைகள் சொன்ன தாத்தா கதை



**காந்தித் தாத்தாவின் பேரிலேதான் குழந்தைகளுக்கு எத்தனை ஈடுபாடு? அவர் வாழ்க்கையைத்தான் எவ்வளவு அற்புதமாய்ச் சித்திரித்துக் காட்டிவிட்டனர். அவர்கள் கலைத்திறனைக் காட்டும் கண்காட்சிக்குள் நுழைவோமா?**

பெரியோர் குழந்தைகளுக்குக் கதை கூறிப் பார்த்திருக்கிறோம். ஆனால் நுங்கம்பாக்கம் பத்மா சேஷாத்ரி பால பவன் பள்ளியில் குழந்தைகள் பெரியோர்களுக்குக் கதை சொன்னார்கள். காந்தித் தாத்தா கதையை மழலை மாறாத பாலகர்கள் அழகாகச் சொன்னது மட்டுமா? அவரது வாழ்க்கை வரலாற்றை வண்ண ஓவியங்களாகவும், பொம்மைகளாகவும் பிஞ்சுக் கரங்கள் வடித்திருந்தன.

சிறுவர்கள் சித்திரங்கள் தீட்டுவதில் மட்டுமல்ல, சிறு பொம்மைகள், 'மாடல்' பர்ண சாலைகள், பள்ளிக் கட்டடங்கள் ஆகிய பல கலைப் பொருட்களை உருவாக்குவதிலும் இயல்பாகவே தேர்ச்சியுள்ளவர்கள் என்பது பொருட்காட்சியைப் பார்த்தவர்களுக்குத் தெரிந்திருக்கும். ஒவ்வொரு காட்சியையும் பள்ளி மாணவர்களே விளக்கிக் கூறியது பாராட்டுக்குரியது. போர்பந்தரில் அண்ணல் பிறந்தது முதல் அவரது இறுதி யாத்திரை வரை பல்வேறு நிகழ்ச்சிகள் இக்கண்காட்சியில் இடம் பெற்றிருந்தன. காந்திஜி பெரிதும் விரும்பிய அரிச்சந்திர நாடகத்தின் மேடைக் காட்சியும் சபர்மதி ஆசிரமத்தின் அமைப்பும் குறிப்பிடத்தக்கவை: கண்காட்சியில் அமெரிக்காவைப் பற்றிக் கூற ஒரு பகுதியை ஒதுக்கி இருந்தார்கள். ஓர் அறையில் தரையில் பெரிய ரங்கோலி சித்திரம் வரைந்துள்ளதுபோல் தோன்றியது. உற்றுப் பார்த்ததும் அது அமெரிக்காவின் வரைபட 'மாடல்' என்று தெரிந்தது. மே ஃப்ளவர் கப்பலில் கிழக்குக் கரைப் பகுதியில் வந்து இறங்கிய ஆங்கிலேய 'யாத்திரிகர்கள்' சிறிது சிறிதாக எவ்வாறு அமெரிக்காவின் மேற்குப் பகுதிக்கு முன்னேறிச் சென்றனர் என்பதை இது விளக்கியது. அமெரிக்காவின் விஞ்ஞான வளர்ச்சியையும் கென்னடியின் வாழ்க்கையில் நிகழ்ந்த பல சம்பவங்களையும் விளக்கியது இன்னொரு பகுதி. அமெரிக்க 'சூப்பர் மார்க்கெட்' எவ்வாறு செயல்படுகிறது என்பதை விளக்கியது ஒரு 'மாடல்'.

திருவள்ளுவரின் பொன்மொழிகள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து அவற்றின்படி காந்தியடிகள் எவ்வாறு வாழ்ந்து காட்டினார் என்பதைச் சிறப்பாகச் சித்திரித்திருந்தது குறிப்பிடத்தக்கது. மாணவர்களுக்கு இது ஒரு நல்ல பயிற்சி. ஏட்டுக் கல்வியுடன் நில்லாமல் இது போன்ற காட்சிகளை அவ்வப்போது ஏற்பாடு செய்து பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிப்பது மிகவும் பயனுள்ள முயற்சி. சிறுவர்களிடம் ஒளிந்திருக்கும் கலைத் திறனை வெளிக் கொணரப் பயன்படுவதுடன் பாடத்தை உற்சாகமாகக் கற்கவும் உதவும் அல்லவா?

அண்ணலின் நூற்றாண்டு விழாவை இப்பள்ளி மாணவ மாணவியர் மிகச் சிறப்பான, புதுமையான விதத்தில் கொண்டாடி விட்டனர்.

—பாணன்

# மனங்கள்

கோமகள்

கிருஷ்ணன் பரபரப்போடு கடிதத்தைப் பிரித்தான். கண்கள் மேலோட்டமாக வரிகளில் மேய்ந்தன.

''டே, பிரேமா! என் சிநேகிதன் மாதவன் தான் எழுதியிருக்கான்...!''

''ஏன் அன்னிக்கே வரலியாம்!'' ஈரக் கையைப் புடவை நுனியில் துடைத்தவாறே அவன் அருகில் வந்தாள் பிரேமா.

''பயல் முன்பே வரேன்னுட்டு, அப்புறம் வரலேன்னு தந்தி கொடுத்தானே, அதற்கு ஒரு 'எக்ஸ்க்யூஸ்'கூட கேட்கலேடி! பதிலா பெருமைப்பட்டுக்கிறான். நான் எழுதினபடி வந்திருந்தா குப்பம் விபத்திலே என்னவாகியிருப்பேனோ, நான் பிழைச்சேன். இதற்குக் காரணமான என் ஹையர் ஆபீஸர் தினகரனுக்கு பர்சனலா ஒரு விருந்து கொடுத்தேன்னு எழுதியிருக்கான்..''

''ஓகோ! அவர் வரதாக இருந்த ரயில் தான் விபத்து ஆனதா? நல்லவேளை! கடவுள் தான் காப்பாத்தினார்.....ஆமாம்! என்னிக்கு வராறாம்?''

கதவருகே நிழலாடியது. புஷ்பா தான் நின்று கொண்டிருந்தாள்.

''என்ன புஷ்பா?''

''ஒன்றுமில்லேண்ணா...''

''ஒன்றுமில்லையாவது? அவள் தன் சிநேகிதிகளோட நாளைக்கு சினிமா போக புரோகிராம் போட்டிருக்கா. அதுதான் மாதவன் என்னிக்கு வரான்னு தெரிஞ்சுக்க நிக்கறா... இல்லையா புஷ்பா?''

''நாளைக்குத்தான் புஷ்பா, மாதவன் வரேன்னு எழுதியிருக்கான்...''

''நாளைக்குக் காலையிலா அண்ணா? நாங்க மாட்னிக்குத்தான் போகிறதா தீர்மானிச்சோம்...!''

''ஏன், சினிமாவுக்கு இன்னொரு நாள் போயிக்கிறது.''

''நாளையோட அந்தப் படம் கடைசி அண்ணா!'' புஷ்பா தவிப்பும் ஆவலுமாகத் தமையனின் அனுமதிக்குக் காத்திருந்தாள்.

''போனால் போகுது போ. திரும்பத் திரும்ப எந்தத் தியேட்டரிலாவது வராமலா போகிறது?''

புஷ்பாவின் முகத்தில் வருத்தம் முற்றுகை இட்டது. ஆமாம்! அண்ணாவுக்குத் தன் நண்பன் உசத்தி. முன்பு அப்படித்தான் புஷ்பாவும் அவள் தோழிகளும் ஒரு 'பிக்னிக்' போக ஏற்பாடு செய்யும்போது வருகிறேன் என்றார். ஆனால் வரவில்லையென்று தந்தி கொடுத்து விட்டார். ஒரு வாரம் கழிச்சு இப்போ வரப்போறாராம். அதுவும் நாளை...! நாளை கடைசியாக ஓடும் நல்ல படம் ஒன்றை அவள் தவற விட்டு விடப் போகிறாள். மெய்யாக வந்தாலும் தேவலையே, தட்டிக் கழிச்சுட்டு என்னையும் சினிமா போக விடாமல் அடிச்சுடுவாரே... தன் எண்ணங்களை அவள் மெல்ல முணுமுணுத்தபோது பிரேமா அவளைத் தட்டிக் கொடுத்தாள்.

''நிச்சயம் நாளைக்கு வந்துவிடுவார் புஷ்பா. ஒருதரம் தட்டிப் போனால் அதேபோல அப்புறமும் நடக்குமா என்ன? உன்னை அவர் பார்க்க வரார்ங்கறது முக்கியமே யொழிய, சினிமாவுக்குப் போறது இல்லே...''

''வந்தால் சரிதான் மன்னி!'' புஷ்பாவுக்கு மட்டும் மாதவனை எதிர்நோக்கும் மனமில்லையா என்ன? ஏன் இப்படி அசுவாரசியமாகப் பேசுகிறாள்?

வைகறை வேளை.

புஷ்பா எழுந்து கண்ணைக் கசக்கும்போதே அதிசயப்பட்டாள். மன்னியா இத்தனை கருக்க எழுந்திருந்து குளித்து விட்டுச் சமையலறையில் பலகாரம் செய்கிறாள்? முன்பு மாதவன் வருகிறான் என்றபோது இப்படித் தானே பரபரத்தாள் என்ற நினைவும் வந்தது.

''என்ன மன்னி?'' இகழ்ச்சியாகச் சிரித்தாள் புஷ்பா. ''இன்று காலை சமையல் இல்லையா?''

''இன்று ஞாயிற்றுக்கிழமைதானே? ஒரு நாள்தான் காலை டிபன் செய்தால் என்ன? மாதவன் காலை ரயிலில் வந்துட்டா



எதற்கும் தயாராக வேண்டாமா? அவர் காப்பி டிபன்காரர்... நீ குளிச்சிட்டு டிரஸ் பண்ணிக்கோ புஷ்பா...''

''முதல்லே காப்பி கொடு மன்னி. குளியல் எல்லாம் அப்புறம்தான்!''

''இந்தா காப்பி! குடிச்சுட்டு, பட்டு உடுத்திக்கலேன்னாலும் பரவாயில்லே. புது நைலக்ஸை உடுத்திக்கோ.''

''குளிக்கிறேன். சாதாரண டிரஸ் போதும். அலங்காரம் பண்ணிக் கொண்டு ஏமாந்து அழுது வடியணுமா?''

''இன்னிக்கு நிச்சயம் வருவார் போ!''

''வரதானா இத்தனை நேரம் வந்திருக்கணுமே!''

''ரயில் என்ன சரியான நேரத்துக்கா வந்துடறது? கொஞ்சம் முன்னே பின்னே தான் வரும்.''

''சரி மன்னி! உன் நம்பிக்கையை நான் கெடுப்பானேன்?'' என்றவாறே புஷ்பா குளியலறைக்குள் போய்த் தாளிட்டுக் கொண்டாள்.

நிதானமாகக் குளித்து விட்டு வந்தபோது பிரேமா அவளைப் பார்த்து ''பார் புஷ்பா! எல்லாம்நன்றாக அமைஞ்சிருக்கான்னு பார்!'' என்றாள்.

தித்திப்புச் சுவையோடு நெய்யும், குங்குமப் பூவும் கமகமக்க, வாயில் கரைந்தது பூந்தி. காரமும் முறுமுறுப்பும் முந்திரிப் பருப்புமாகப் பகோடா. புஷ்பா சிரித்தவாறே அவற்றை ருசி பார்த்தாள்.

''மன்னி! ஒருவேளை அவர் காலையில் வரலேன்னா மாலைக்கும் உபயோகப்படட்டும்னு தானே கெடாத பலகாரங்களாகச் செய் திருக்கே?''

பிரேமா மையமாகச் சிரித்துக் கொண் டாள்.

''உனக்கே நம்பிக்கை யில்லே...!''

''நம்பிக்கை யில்லாமலென்ன? காலை நேரத்தில் போய்த் தொந்தரவுபடுத்துவானேன்னு ஹோட்டல்லே சாப்பிட்டுட்டு வந்துடறாரோ என்னவோ?''

''ஓகோ! அப்போது மத்தியானச் சாப்பாடும் தடபுடல்தான் இல்லையா?''

''பின்னே வெறுமனே குழம்பு, கறி போட்டுட முடியுமா? கொஞ்சம் நீயும் உதவி பண்ணு. வடைக்கு உளுத்தம் பருப்பை ஊறப்போடு. பாயசத்துக்குச் சேமியாப் பொட்டலத்தைப் பிரித்துப் பித்தளை முறத்தில் கொட்டு...''

''தி சேம் டே ரிப்பீட்ஸ்! அப்படித்தானே மன்னி? அன்னிக்கு பஜ்ஜி, சொஜ்ஜி செய்திருந்தே. நம்ப மூணு பேருமே மூக்கைப் பிடிக்கத் தின்றோம். வேலைக்காரிக்கும் அன்னிக்கு வேட்டை! இன்னிக்கு முழிச்சுக் கிட்டே மன்னி! மீந்தாலும் நாளைக்கு நாமே வெட்டலாம்...!''

பிரேமா நம்பிக்கையோடு சொன்னாள்: ''இன்னிக்கு நிச்சயம் வருவார் பாரேன்.''

''வரட்டுமே! பாவம்! உன் சிரமத்துக்கு முடிவு கட்டவாவது...''



மணி ஒன்பது. ஞாயிற்றுக் கிழமைகளில் கிருஷ்ணன் சாவகாசமாக எழுந்திருக்கும் நேரம் அது. இன்று குளியல், கஷவரம் எல்லாம் முடித்துக் கொண்டு தெருவைப் பார்ப்பதும், ஆறுக்கும் நெடிக்கும் உலாவுவதுமாக அமைதியின்றி நடக்கிறான்.

பிரேமா தன் பங்குக்குத் தெருவை எட்டிப் பார்த்துவிட்டு வந்தாள்.

''என்ன இன்னும் காணலே?'' அவளிடமிருந்து தன்னம்பிக்கையின் ஸ்திரத்துக்காக வேண்டிப் பதிலை எதிர்பார்த்தான்.

''ஒருகால் பஸ்ஸில் வராரோ?'' பிரேமா அவநம்பிக்கை நடுக்கத்துடன் கேட்டாள்.

''இன்னும் ஓர் அரை மணி நேரம் பார்ப்போம். வரவில்லையானாலும் நாம் காலைடிபன் சாப்பிட்டு விடலாம்.''

அரை மணி நேரம் ஓசையின்றிக் கழிந்தது.

பூந்தியும் பக்கோடாவும் வலை பீரோவில் அடக்கமாயின.

சந்தடியின்றி மூவரும் இட்டிலி சாப்பிட்டனர்.

அடுத்த வேளைக்கான நம்பிக்கையின் ஆசகமாக மதிய உணவு தயாராகத் தொடங்கியது.

''சமையல் சரியாகச் செய்யாம விருந்தாலிடுமென்று வந்ததும் ஒன்றும் செய்ய முடியாது. செய்துடு பிரேமா. அவன் ஹோட்டல்லே தங்கிட்டு வரான் போலிருக்கு. நிச்சயம் வந்துவிடுவான்'' என்று உத்தரவு பிறப்பித்து விட்டுக் கிருஷ்ணன் ஆபீஸ் பைல்களைப் புரட்ட ஆரம்பித்தான்.

பிரேமாவும் புஷ்பாவும் சுறுசுறுப்பாகச் சமைக்க ஆரம்பித்தனர். கூட்டு, அவியல், வறுவல், வடை, அப்பளம், பாயசம் என்று ஒவ்வொரு வகையும் முடிந்தது. பிரேமாவும் புஷ்பாவும் கையைச் சோப்பிட்டுக் கழுவிக் கொண்டிருந்தனர்.

தெரு வாசற் படியண்டை 'கிணுங்' கென்ற சைக்கிள் மணியோசை கேட்டது.

மாதவன் வரவில்லை என்று தந்தியா, எக்ஸ்பிரஸ் தபாலா? - புஷ்பா தெருப்பக்கம் விரைந்தாள்.

எதிர்பார்த்தபடி யாருமில்லை. புஷ்பாவின் தோழியின் தம்பிதான் வந்திருந்தான். ''மாட்னிக்கு வேண்டாமாம். சாயந்திரம் ஆறு மணி ஷோவுக்குத்தான் டிக்கட் புக் பண்ணியிருக்காளாம் அக்கா. உங்களை ஐந்தரைக்குத் தியேட்டருக்கு வந்துவிடச் சொன்னாள்....''

''இன்னிக்குப் புஷ்பா வரமாட்டாளே!'' என்று பிரேமா குறுக்கிட்டாள்.

''என்ன மன்னி? அண்ணாகிட்டே சொல்லேன்....நாலு மணிவரையில் பார்க்கலாம். அப்புறம் போறேனே....''

''அப்புறம் வந்துவிட்டால்?''

புஷ்பாவின் உற்சாகம் வடிந்து விட்டது.

''என்ன சினிமா அப்படி? ஒரு நாள் நான் போகாட்டாப் போறது....''

''வந்தால் சரிதான் மன்னி. இல்லேன்னு பிளான் போட்டபடி போக வேண்டாமா? கிட்டே வந்திருக்கு....''

பிரேமா உள்ளே போனதும் புஷ்பா தோழியின் தம்பியிடம் எதையோ சொல்லியனுப்பினாள்.

மதிய விருந்து தயாராகி விட்டது.

மூவர் மனத்திலும் ஒரு சிறு பரபரப்பு ஏற்பட்டது. எதிர்பார்க்கும் விருந்தினர் வரப் போகிறாரா இல்லையா?

மணி இரண்டு. ஆறிவிட்ட ஆகாரத்தை அவநம்பிக்கை நிறைந்த நெஞ்சோடு மூவரும் உண்டதும், வாசலில் கிணுங் கிணுங் என்று சைக்கிள் சத்தம் கேட்டது. தந்திப் பியூன் உறையை நீட்டினான்.

''மறுபடியும் மன்னிக்கவும். எதிர்பாராத சில காரணங்களால் வர முடியவில்லை. கடிதம் தொடரும். — மாதவன்.''

''என்ன இது, இப்படித் தட்டிக் கழிகிறது இவன் பயணம்?'' என்று சலித்துக் கொண்டான் கிருஷ்ணன்.

''உம்! இன்றையப் பரபரப்பும் வீணாகி விட்டது'' என்று அலுத்துக் கொண்டாள் பிரேமா.

''அண்ணா....! நான் சினிமாவுக்கு.....'' என்று அடக்க முடியாத ஆவலோடு கேட்டாள் புஷ்பா.

''போ, போ! கொஞ்சம்கூட வருத்தம் தெரியாத பெண்தான்!''

''மன்னி! அந்த ஸ்வீட், காரம் இரண்டிலும் நாலு பொட்டலம் கட்டிக் கொடேன். 'பாப்கார்ன்' வாங்கற செலவு மிதியாகும்!''

பிரேமா அவள் குரலின் கேலியைப் புரிந்து கொள்ளாதவள் போல் காகிதங்களில் அவற்றைக் கட்டித் தந்தாள்.

புஷ்பா தியேட்டருக்குப் பறந்தாள். காலையில் பிரேமா அவளை எந்த அலங்காரம் செய்து கொள்ளச் சொன்ன போது மறுத்தாளோ, அதே அலங்காரத்துடன் அவள் புறப்பட்டுப் போனாள்.

''நீயில்லாமல் சினிமாவா? நல்ல வேளை, நீ வந்தாயே....'' தோழியர் பட்டாளம் கலகலத்தது.

''உன்னை மனையில் உட்கார வைக்க உங்கண்ணா, என்னடி இப்படித் துடிக்கிறார்?'' என்று பொறுமைப்பட்டாள் ஒருத்தி.

''ஆனால் புஷ்பா என்னவோ சினிமாத் தியேட்டர் சேரில் உட்காரத்தான் துடிக்கிறாள்'' என்று குத்தினாள் ஒருத்தி.

''மனையில் உட்கார்ந்தபின், தியேட்டரிலும் ஜோடியாக உட்காராமல் போகிறேனா என்ன?'' என்று புஷ்பா அவர்கள் வாயை அடைக்கக் கூறினாள்.

விதம்விதமான வாத்தியங்களின் மீட்டலாகச் சிரித்தனர் தோழிகள். புஷ்பா வெட்கத்தில் சிலிர்த்துப் போனாள்.

ஒரு செவ்வாய்க் கிழமை.

கடிதத்தைப் புஷ்பாதான் பிரித்தாள்.

''என்ன கடிதம்?''

''மாதவன்தான் எழுதியிருக்கார் மன்னி. நாளைக் காலை வராராம்.''

''மூன்றும் நடுவை. தடங்கல் வராது.''

''அவருக்குத் தடங்கல் வருமோ என்னவோ? என் கிளாஸுக்குத் தடங்கல் வந்துடும் போலிருக்கு, மன்னி. நாளை புதன் கிழமை கிளாஸ் உண்டே?''

''மகா கிளாஸ்! இதைவிட அது முக்கியமா?''

''என்ன மன்னி. ஒரு நாள் போகலேன்னா அப்புறம் எதுவும் புரியவே புரியாது...''

# இதோ வருகிறது மாடர்ன் குபு-குபு வண்டி—மகத்தான 5 வகை புதியரொட்டிகளுடன்!

**மசாலா ரொட்டி...**
வாய்க்கு விறுவிறுப்பு

**பழவகை ரொட்டி...**
சக்தியோடு சுவை

**இனிப்பு ரொட்டி...**
இன்பக் கனியமுது

**பழுப்பு ரொட்டி...**
நலம் தரும் இனிமை

**பால் ரொட்டி...**
போஷிக்கும் சத்துணவு




சலிப்புற்ற காலைக்கு தினமும் ஒரு புதுமையை வழங்குகிறது "மாடர்ன்"! தேர்ந்தெடுக்க 5 நவீன வகைகள். உங்களுக்கு விருப்பமான வகையை எளிதில் தேர்ந்தெடுக்க வண்ண வண்ண மேலுறைகள். தவிர நீங்கள் என்றும் விரும்பும் மாடர்ன் வெள்ளை ரொட்டியும் உண்டு. புரதச்சத்து, வைட்டமின்கள், தாதுப்பொருள்கள் ஆகிய-வற்றுடன் இணையற்ற 'மாடர்ன்' முறையில் பக்குவமும் பெற்ற மகத்தான ரொட்டி. அதுவும் சீக்கிரமே புதிய பாக்கெட்டில் வரப் போகிறது. சிறந்தது எதுவோ அதையே உங்கள் அன்புக் குடும்பத்தினருக்கு அளியுங்கள். அவர்களுடைய உணவில் தவறாது தினமும் இடம் பெறட்டும் மாடர்ன்.

**மாடர்ன்** மகத்தான ரொட்டி

மாடர்ன் பேகரீஸ் (இந்தியா) லிமிடெட்

டெல்லி . பம்பாய் . சென்னை . அகமதாபாத் . கொச்சி

ASP/M-1

பிரேமா கடிதத்தை மறுபடியும் படித்துப் பார்த்துவிட்டு, ''காலையில் வரேன்னு எழுதியிருக்காரே. மாலையில் நீ கிளாஸுக்குப் போகலாம்'' என்றாள்.

புதன்கிழமை காலை விடிந்தது. மன்னி இன்று அதீத பரபரப்போடு இல்லை என்பதைப் புஷ்பா கவனித்தாள். ஆனாலும் வகைகளில் குறைவில்லை.

வழக்கம் போல் பத்து மணி வரையில் பார்த்துவிட்டு மூவரும் சாப்பிட்டனர். கிருஷ்ணனின் முகத்தில் சுயாடவில்லை. பிரேமாவின் முகத்தில் கோபத்தின் சாயை படர்ந்திருந்தது. இப்படியா ஒருவன் இழுத்தடிப்பான்? எத்தனை தரம் ஏற்பாடுகள் செய்து கலைவது?

கிருஷ்ணன் அனுமதி கேட்டிருந்தபடி ஒரு மணி நேரம் தாமதமாக அலுவலகம் கிளம்பி விட்டான்.

மதிய உணவு ஆடம்பரமின்றி முடிந்தது.

காலையில் எதிர்பார்த்த சபலமான எதிர்பார்ப்பு மாலைவரை தொடர்ந்தது. இதற்கிடையே ஆபீஸிலிருந்து அண்ணனின் பிஹூன் விடு தூது வேறு! 'இன்றும் வரவில்லை' என்ற மன்னியின் பல்லவி ராகமாலிகை உருக்கம் நிறைந்ததாக இருந்தது!

மாலை டிபன் சாப்பிட்டதும் புஷ்பா வகுப்புக்குப் புறப்பட்டு விட்டாள்.

புஷ்பா வீடு திரும்பும்போது கதவு பூட்டியிருந்தது. ''மன்னி கோயிலுக்குப் போயிருக்கிறாள்'' என்று எதிர்த்த வீட்டில் சாவி வாங்கிய போது சொன்னார்கள். படியேறும் போது வராந்தாவில் நிழலாடியது.

''கிருஷ்ணன் இல்லையா?'' இருட்டில் குரல் தவிர உருவம் விளக்கமாகத் தெரியவில்லை.''

''ஆபீஸ் விட்டு வரலை.''

''எத்தனை மணிக்கு வருவார்?''

''வருகிற நேரம்தான்'' என்றவாறே பூட்டைத் திறந்த புஷ்பா ஹால் விளக்கைப் போட்டுவிட்டு, ''உட்காருங்கள்'' என்றாள்.

வெளி வராந்தாவை விட்டு உருவம் உள்ளே நகரவில்லை. ''இப்படிப் போய் விட்டே வருகிறேன். கிருஷ்ணன் வரட்டும்.''

''சரி'' என்றவள் கதவைத் தாளிட்டு விட்டு உடை மாற்றிக் கொள்ள உள்ளே விரைந்தாள்.

சிறிது நேரத்தில் திரும்பியவள் ஹாலில் உட்கார்ந்து மேஜையின்மேல் கால்களைத் தூக்கிப் போட்டவாறே அன்று வகுப்பில் நடந்த வினோபாவின் பாடல் ஒன்றை எடுத்துப் பார்த்தாள். அந்த அனிவகுப்புப் பாட்டு அவள் வாயில் லலித சங்கீதமாகப் பிரவகித்தது.

கதவைத் தட்டும் ஒலி கேட்டது.

புஷ்பா தாள் நீக்கிய போது வெளியே நின்றவன், ''கிருஷ்ணன் இன்னும் வரக் காணோம். நான் காலையில் வந்து பார்க்கிறேன். வந்தால் சொல்லுங்கள்'' என்றான். இருளில் முகம் தெரியவில்லை.

'' நீங்கள் போய் விட்டு வருவதாகச் சொன்னீர்களே, போகவில்லையா?''

''இல்லை. இங்கேதான் நின்றேன். ஒரு சந்தேகம்..... நீங்கதானே புஷ்பா?''



புஷ்பா வியப்பும் சம்சயமுமாய், ''நீங்கள் யார்?'' என்றாள்.

''கிருஷ்ணன் வந்தான்னா மாதவன் வந்துவிட்டுப் போனதாகச் சொல்லுங்கள்.''

''மா...த...மா...தவனா?'' அவள் நெஞ்சுக்குழியில் ஒரு விக்கல். ஐயோ, தெரியாமல் போய் விட்டதே என்ற பதற்றம். அண்ணா வந்து என்ன சொல்வாரோ, அவரைக் கூப்பிடலாமா, புறப்பட்டுப் போகிறாரே.... எப்படி அழைப்பது?

புஷ்பாவுக்கு அழுகை முட்டிக் கொண்டு வந்தது. இப்படி யாருமற்ற நேரத்தில் மாதவன் வந்து, அவள் அசட்டுப் பிசட்டென்று நடந்து கொள்ளும்படியாகி விட்டதே!

''என்னம்மா, புஷ்பா, ஏன் அழறே?'' என்று சோர்வோடு வந்த கிருஷ்ணன் ஆறுதலாக வினவினான்.

''என்னைத் தனியா வீட்டில் விட்டுட்டு.... மாதவன் வந்துட்டுப் போகிறார்....!''

''மாதவனா? எங்கே இப்போது?''

''இத்தனை நேரம் இருட்டிலேயே நின்றிருக்கார். இப்போதான் போறார். தெருமுனை திரும்பியிருப்பார்.'' திக்கிடும் குரலிலேயே கூறினாள் அவள்.

கிருஷ்ணன் பரபரப்போடு தெருவில் நடந்தான். திரும்பும் போது மாதவனோடு வரத் தவறவில்லை. மாதவனை ஹாலில் உட்கார வைத்துவிட்டு உள்ளே வந்தான் கிருஷ்ணன்.

''என்ன புஷ்பா ? இப்படி வந்தவர்களைத் தெருவிலேயா நிற்க வைப்பது ?'' வியப்பும், வேதனையுமாகக் கேட்டான் அவன்.

''நான்.... நான்... எனக்கு யாரென்றே தெரியாது அண்ணா...!'' புஷ்பா குளறினாள்.

''பரவாயில்லை. நான் யாரென்று கூறிக் கொள்ள வில்லையே....'' என்று மாதவன் கதவருகே வந்து நின்று கூறினான்.

''உட்கார் மாதவா நீ.... உன் மன்னி எங்கே புஷ்பா ?''

''கோயிலுக்கு....''

''இதோ ஒரு நொடியில் போய் அழைத்து வரேன்'' என்று மீண்டும் வெளியே ஓடினான் கிருஷ்ணன்.

''கொஞ்சம் தண்ணீர் வேண்டும்'' என்று குரல் கொடுத்தான் மாதவன்.

வெட்கமும், தடுமாற்றமுமாகத் தண்ணீரை மேஜையின்மீது வைத்த புஷ்பா சட்டெனத் திரும்பினாள்.

''நீங்கள் பாடிய 'மார்ச்சிங் சாங்' பிரமாதமாக இருந்தது !''

''மன்னிக்க வேண்டும்! யார்னு தெரியாமல்.....'' அவள் குரலில் குற்ற உணர்வு தலைதூக்கியிருந்தது.

''யார்னு காட்டிக் கொண்டிருந்தால் ஒரு பூனைக் குட்டியை அல்லவோ பார்த்திருப்பேன் ! அசல் புஷ்பாவைப் பார்த்திருக்க முடியுமா ?''

இனிய மீட்டலில் சிலிர்ப்படைந்தவளாய்ப் புஷ்பா அவனை நிமிர்ந்தாள். அந்தக் கணத்தின் இனிமைச் சுடரொளியாய்க் கண்கள் ஒளிர்ந்தன. மலைப்பும், மயக்கமுமாக மனங்கள் சந்தித்துக் கொண்டன. அவன் முகத்தில் அன்பு விகசிக்க, அவள் முகத்தில் நாணம் அப்பிக் கொண்டது. எத்தனை நயம், குழைவு ! என்ன நேர்த்தி, அழகு!

பிரேமா மூச்சு இரைக்க ஓடி வந்தாள்.

'' ஒன்றும் அலட்டிக்க வேண்டாம். நீங்கள் சாப்பிடப் போறதே எனக்கும் போடணும்...!'' என்று மாதவன் கூறினான்.

''அது நியாயமில்லை. ஒரு நிமிஷத்திலே செஞ்சுடறேன். முன்னேயெல்லாம் செய்து செய்து விணுச்சு. இப்போ நீங்க வந்திருக்கும் போது எப்படி....?''

''அதற்காக....? இந்த நேரத்தில் சிரமப் படறதா? முன்பு நீங்கள் செய்து வச்சிருந்து காத்திருக்கிற போது வராமப் போனதற்கு இப்போது தண்டனையாகத்தான் இருக் கட்டுமே....!''

'' என்ன இப்போதே புஷ்பாகிட்டே தண்டனை கேக்கறியா மாதவா ?'' என்ற வாறே கிருஷ்ணன் மலைப்பாறத்தோடு உள்ளே வந்தான்: ''பிரேமா, ரவை இருக்கில்லையா? சட்டென்று எதையாவது பண்ணிப் போடு.''

''கிருஷ்ணா ! ப்ளீஸ் ! இன்னொரு நாள் விருந்து சாப்பிடறேன். இப்போது நீ சாப் பிடப் போற மோருஞ் சாதம் போதும் !'' என்றான் மாதவன் கெஞ்சும் குரலில்.

மனங்கள் ஒன்றுபட்டுவிட்ட விதத்தில் மோருஞ்சாதமும், ஊறுகாயும் இனித்தன.

''உனக்குச் சம்மதம் என்று எனக்குப் புரிகிறது. வாஸ்தவம்தானா மாதவா ?'' கிருஷ்ணன் ஆரம்பித்தான்.

வெற்றிலைத் தட்டுடன் வந்த புஷ்பா மாதவனின் முகத்திலிருந்தே சம்மதத்தைப் புரிந்து கொண்டு தலை குனிந்தாள்.

''என்ன புஷ்பா, உனக்கு?''

அண்ணாவின் சீண்டல் அவளுக்குப் புரியாதா என்ன? ''போ, அண்ணா !'' என்று செல்லமாகக் கடிந்தாள் புஷ்பா.

இரு உள்ளங்கள் இணை சேர எதைக் கண்டறிய வேண்டுமோ, அதைக் கண்டு கொண்ட பெருமிதத்திலும், பூரிப்பிலும் அந்த எதிர் கால ஜோடிகள் திளைத்திருந்தனர்.

''புஷ்பா ! ஏதோ டிக்கெட் இருக்காம். உன்னை நாடகத்துக்குக் கூப்பிடறான் பக்கத்து வீட்டுப் பங்கஜம். போய்ட்டு வா, நான் பார்த்துக்கறேன்....'' என்றாள் பிரேமா.

''அது எப்படி மன்னி ? வீட்டுக்கு விருந்தினர் வந்திருக்கும் போது....? நான் போக வில்லை....!''

பிரேமா வேடிக்கையாக அவளைப் பார்த்துச் சிரித்தாள். சினிமா, நாடகம், வகுப்பு என்று வெளி உலக இனிமைகளுக்குப் பறந்தவளா இந்தப் புஷ்பா? வீட்டுக்கு வந்த விருந்தினருக்காகவா அவள் தங்குகிறாள் ? மாதவனை விருந்தினராக மட்டும் மதிப்பவளாகில் எப்போதோ புறப்பட்டிருப்பாளே !

பருவச் சலனமற்றிருந்த இவள் மொட்டு மனமும் மெல்ல மெல்ல மலரத் தொடங்கி விட்டது. ஆம் ! அதுதான் உண்மை! அதை மலர்த்திய பெருமைக்கு உரியவனே, மாதவன் !



< ''அம்மா! உன் மருமகள் இன்று அவளுடைய பிறந்த வீடு போகிறாள். நான் நாளைக்கு ஆபீஸ் விஷயமாக வெளியூர் போகிறேன்.''

''சரி; சரி! அங்கு உன் மாமனார் மாமியார் மைத்துனர்களை நான் விசாரிக்கிறதாகச் சொல்லு. சீக்கிரமாக ரெண்டு பேரும் வந்து சேருங்கள்.''

□

''என்னது விரல்களை மடக் மடக் > கென்று சொடுக்கி விட்டுக் கொள் கிறேயே ?''

''ஒரு தப்புகூட இல்லாமல் ஒரு லீவ் லெட்டர் டைப் செய்யச் சொன்னார் ஹெட்கிளார்க்கு. 1008 லெட்டர் அடிக்கும்படியாகி விட்டது.''



## ஓடும் நதியில் ஒட்டகம்!



நேரில் கண்டவர்: 'பரதேசி'

| | |
|---|---|
| ஒட்டகம் சுமை இல்லாமல் | 5—00 |
| யானை | 5—00 |
| மோட்டார்கார் | 5—00 |

திருச்சி மாவட்டம் திருப்பராய்த்துறைப் பரிசல் துறையில் பரிசலில் ஏற்றிச் செல்லும் பொருள்களின் கட்டணப் பட்டியலில் இவை இடம் பெற்றுள்ளன.

## ஓர் எழுத்தாளரைப் பற்றிய சோகக் கதை

நாவலாசிரியர் ஸ்டோவெல் ஸ்காட்டினுடைய தகப்பனார் லாய்ட்ஸ் ஒரு பெரிய வியாபாரி. ஸ்காட்டுக்கோ வியாபாரத்தில் ஈடுபட விருப்பம் இல்லை. எழுத்தாளராகவே விளங்க வேண்டும் என்று விரும்பினார்.

நீண்ட நேர விவாதத்துக்குப் பிறகு இறுதியாக லாயிட்ஸ் கூறினார்: "என்னுடைய நண்பன் ஒருவனின் ஆபீஸில் நல்ல வேலை கொடுக்கச் சொல்லி யிருக்கிறேன். நல்ல சம்பளம் கிடைக்கும். இன்னொருதடவை என்னிடம் வந்து புத்தகம் எழுதப்போகிறேன் என்றுசொல்லாதே."

தந்தை சொல்படியே ஸ்டோவெல் ஸ்காட் தமக்குப் பிடிக்காத வேலையில் அமர்ந்தார். ஆபீஸ் வேலை முடிந்ததும் கதைகள் எழுதுவார். அவருடைய கதைகள் மிக நன்றாக இருக்கவே ஒரு பிரசுரகர்த்தர் அவற்றைப் பிரசுரிக்கவும் முன்வந்தார். ஸ்காட்டின் நாவல்கள் பல ஆயிரக்கணக்கில் விற்பனையாயின.

ஸ்காட்டினுடைய தந்தை நிறையப் புத்தகங்கள் படிப்பவர். புனைபெயரை வைத்துக் கொண்டு எழுதிய ஒரு நாவலாசிரியரின் பல நாவல்கள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. ஒரு நாள் ஸ்காட்டைக் கூப்பிட்டவர் அந்த நாவல்களைச் சுட்டிக் காட்டி, "இம்மாதிரி நாவல்களை எழுதக்கூடிய திறமை மட்டும் உனக்கிருந்தால் நீ விரும்பியபடியே எழுத்துலகில் புக அனுமதித்திருப்பேன்" என்றார். ஸ்காட் ஒன்றும் பதில் பேசவில்லை.

சிறிது நாட்கள் கழித்து ஸ்காட்டின் தந்தையும் இறந்துவிட்டார். தாம் பெரிதும் பாராட்டிப் பேசிய அந்த நாவல்களை, 'ஹென்றி ஸெட்டான் மெரிமன்' என்ற புனைபெயரில் எழுதியது தம் மகனேதான் என்பதைக் கடைசி வரை அவர் அறியவேயில்லை.

தகவல்: வி. ந. ஸ்ரீதரன் ஆதாரம்: இங்கிலீஷ் டைஜஸ்ட்



தெரு நாய் ஒன்றைக் கட்டி இழுத்துக் கொண்டு வந்த சிறுவன் ஒருவன் தன் நண்பனிடம் "இது போலீஸ் நாய்" என்றான். ஒரே சிரிப்பு.

"போடா, என்ன போலீஸ் நாய் இது?" என்றான் நண்பன்.

"உஸ்! சப்தம் போடாதே. இது ரகசியப் போலீஸ் நாய். வெளியே தெரியாது" என்றான் சிறுவன். - 'சாரனெட்' (பாபு)

## உழைப்பின் வெற்றி!

ஒவ்வொரு பறவைக்கும் ஆண்டவன் அமுது படைக்கின்றான். ஆனால், அந்த



உணவை அவர் பறவையின் கூடு தேடிக் கொணர்ந்து அளிப்பதில்லை. - ஹாலண்ட்

★

'உயிரினத்தின் தோற்றம்' என்ற நூலை எழுதி முடிக்க டார்வினுக்கு 17 ஆண்டுகள் பிடித்தன.

★

'த காபிடல்' (Das Capital) என்ற நூலை எழுத கார்ல் மார்க்ஸ் 18 ஆண்டுகள் உழைத்தார்.

★

லியோனார்டா டா வின்சி என்ற உலகப் புகழ்பெற்ற ஓவியர், பொழுது புலர்ந்ததும் சித்திரம் தீட்டுவதற்காக வீட்டை விட்டுப் புறப்படுவார். கதிரவன் மறைந்து இருள் முற்றும் படரும் வரை அவருக்குப் பசி, தாகம் என்ற நினைவே இராது.

★

வாடர்லூ சண்டைக்கு முன்பு, தொடர்ந்து பதினெட்டு மணி நேரம் நெப்போலியன் உண்ணவுமில்லை, உறங்கவுமில்லை.

தொகுப்பு: 'பாணன்'
ஆதாரம்: 'மிர்ரர்'



"ஆயிரம் மைல் பயணமானாலும் அந்த ஒரு அடி வைத்துத்தான் ஆரம்பிக்க வேண்டும்."

– ஜான் கென்னடி (பாபு)



# இரத்த பாசம்

மூலம்: தகழி சிவசங்கரப்பிள்ளை
தமிழாக்கம்: கே. நாராயணன்

"நான் முடிவு பண்ணிவிட்டேன். நான் அதைச் செஞ்சுதான் தீருவேன்" தந்தைக்கு எதிரில் நிற்கா விட்டாலும் கோபாலன் அதைச் சொல்லத்தான் செய்தான். அவன் வீட்டுக்கு வடக்குப் பக்கம் நின்று கொண்டிருந்தான். சங்கரன் நாயர் கிழக்குப் பக்கத் திண்ணையில் நின்று கொண்டிருந்தார். மகன் உறுதியாகச் சொல்கிறான்! அவன் அதைக் கட்டாயம் செய்வான்.

சங்கரன் நாயர், "நீ அதைச் செய்வியா?" என்று அலறியபடியே குதித்தெழுந்து வடக்குப் பக்கம் நோக்கி ஓடினார். அவர் கையில் ஒரு தடி இருந்தது. தந்தை பாய்ந்து வருவதைப் பார்த்துக் கோபாலன் ஓடுவது போல் நடந்தான். சங்கரன் நாயர் தம் கையில் இருந்த தடியைக் கோபாலன் கால் முட்டை நோக்கி ஓங்கி எறிந்தார். நல்ல காலம், குறி தவறியது.

அமளியைக் கேட்டு அடுக்களையிலிருந்த பார்வதி அம்மாள் வெளியே வந்தாள்.

அவள் கடிந்து கொள்வதைப் போல் கணவனிடத்தில் கேட்டாள். "என் இந்த அட்டகாசம்?"

"அவன் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறானாம். என்ன துணிச்சல் அவனுக்கு என் முகத்தைப் பார்த்தும் சொல்ல!"

பார்வதி அம்மாள் கணவனை இலேசாகக் குற்றம் சாட்டினாள். "அவன்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடிவு செய்தான் என்றால், நீங்கள் ஏன் உங்கள் முகத்தைப் பார்த்துச் சொல்ல அவனுக்குச் சந்தர்ப்பம் கொடுத்தீங்க?"

சங்கரன் நாயரின் கோபம் மனைவியின் பக்கம் திரும்பியது. "இல்லாவிட்டாலும் நீங்க அந்த இனத்தைச் சேர்ந்தவங்கதானே அப்பனை அடிக்கிற வம்சம்."

பார்வதி அம்மாளுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. "இந்தாங்க, பிறந்த வீட்டைப் பற்றி ஒன்றும் தாறுமாறாகச் சொல்லாதீங்க. நாங்க ஒன்றும் அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவங்க அல்ல."

"பின்னே யாரடீ, நானா அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவன்?"

"நான் ஒன்றும் அப்படிச் சொல்லலே!"

சண்டை முற்றாமல் இருக்கப் பார்வதி அம்மாள் உள்ளே போனாள். கோபம் தாளாமல் சங்கரன் நாயர் என்னவெல்லாமோ சொல்லிக் கொண்டிருந்தார். பார்வதி அம்மாளும் அடுக்களையில் என்னவெல்லாமோ முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

வீட்டை விட்டு வெளியேறின கோபாலன் போனது நேராகக் கௌரியின் வீட்டுக்குத் தான். அது ஒரு சவால் விடுவது போல் இருந்தது. சங்கரன் நாயர் பார்க்கட்டும் என்ற எண்ணத்துடன், அவர் பார்க்கும் படியாகவே அந்தச் சண்டை முடிந்தவுடன், அவன் அவள் வீட்டுக்குப் போகிறான்! தகப்பனார் பார்க்கிறாரே என்று இலை மறைவு காய் மறைவுகூட இல்லை.

சங்கரன் நாயர் ஒரு பைத்தியக்காரனைப் போல் சத்தம் போட்டுச் சொன்னார். "என்னடி அங்கேயா போறான்?"

பார்வதி அம்மாள் வடக்குப் பக்கம் வந்து பார்த்தாள். கோபாலன் திண்ணையில் உட்கார்ந்து ஒரு பிடி பற்ற வைத்துக் கொண்டிருந்தான். அப்போது கௌரி முற்றத்தில் வந்து நின்றாள். அவர்கள் இருவரும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவன் கால் விரலினால் என்னமோ

வரைகிறுன் இவை எல்லாவற்றையும் பார்வதி அம்மாளும் சங்கரன் நாயரும் பார்த்தார்கள்.

இந்தத் தடவை ஆத்திரம் வந்தது பார்வதி அம்மாளுக்கு !

''அட பாவி ! பாருங்களேன் அவனை, எப்படிக் குழைகிறுன்! என் பிள்ளைக்கு என்ன சொக்குப் பொடி போட்டு வைத் திருக்கானோ ?''

தன் மகன் என்றென்றைக்குமாகத் தன் கையை விட்டுப் போனது போல் பார்வதி அம்மாள் துக்கம் கொண்டாள். அவள் தனக்குத் தானே உரக்க, ''கோபாலா!'' என்று கூப்பிட்டாள். கௌரி திரும்பிப் பார்த்தாள். கோபாலன் உள்ளே போளுன்.

அது, அந்தக் கிராமத்தில், அந்த மாதத்தில் நடந்த மாபெரும் நிகழ்ச்சியாக இருந்தது. கோபாலனுக்குக் கௌரியைத் திருமணம் செய்துகொள்ள ஆசை. ஆனல், சங்கரன் நாயருக்கும், பார்வதி அம்மாளுக்கும் அதற்குச் சிறிதுகூட விருப்பமில்லை என்பது மட்டுமல்ல, அவர்கள் எதிரியும்கூட. ஒன்றிரண்டு பேர் சமாதானம் செய்து வைக்க முன்வந்தார்கள். ''கௌரி ஒரு நல்ல பெண் ; அண்டை வீட்டுச் சம்பந்தமாக இருப்பதால் இந்த உறவினல் நன்மை ஏற்படலாம்'' என்றெல்லாம் அவர்கள் வாதாடினர்கள்.



பூப்புள்ளி வீட்டு அம்மு அம்மை வந்தாள். ''அடுத்த வீட்டுப் பெண்ணுனதாலே உங்களுக்கு நல்லதுதான். ஏதாவது கூடம் புக்கு வந்தால் கஞ்சியோ காப்பியோ வைச்சுத்தர உதவியாயிருக்கும்.''

''சீ, போ !'' என்று அம்மு அம்மை காது வெடிக்கும்படியாகப் பார்வதி அம்மாள் வெறுப்புடன் வசைமாரி பொழிந்தாள். பார்வதி அம்மாள் அப்படித் திட்டியிருக்க வேண்டாம். அம்மு அம்மைக்குக் கோபமும் அவமானமும் தோன்றிற்று ; இதனல் இருவருக்கும் சண்டை வந்தது.

இன்னெரு மத்தியஸ்தம் சிறிது கௌரவம் நிறைந்ததாக இருந்தது. மத்தியஸ்தம் செய்து வைக்க வந்தவர் கேசவப்பிள்ளை.

கேசவப் பிள்ளை ஒரு புன்னகையுடன் சொல்ல ஆரம்பித்தார். ''தகப்பனர் பெயருக்கு இழுக்கு வரக்கூடாதே என்று அவன் நினைக்கிறுன். அதனுல்தான் அந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவேன் என்று பிடிவாதம் பிடிக்கிறுன். ஆனல் அந்த விஷயத்தை அவன் உங்களிடத்தில் சொல்ல முடியுமா என்ன? முடியாதே !''

சங்கரன் நாயரின் வாய் திறந்தது திறந்தபடியே இருந்தது !

அந்த இரகசியத்தைக் கேசவப்பிள்ளை சங்கரன் நாயர் காதில் மெல்ல ஓதினர் ''அந்தப் பெண் பிள்ளையாண்டிருக்காள். ஆள் வேறு யாரும் அல்ல; அவனேதான். அப்படி இருக்க அவன் அவளை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பது சரியா ?''

சங்கரன் நாயர் ஒரு புதிய செய்தியைக் கேட்கிறர். ஒருகண நேரம் அவர் அப்படியே அசந்து உட்கார்ந்தார். ''அந்த வீட்டுக்குப் போகாதே என்று நான் பல முறை எச்சரித்தேன். அவன் கேட்டால்தானே? அது யார் வீடு தெரியுமா? அந்தச் சகுனி கொச்சகுஞ்சி னுடையது. அங்கு போனுலே ஆபத்து.இப்போ சாமர்த்தியமாக எல்லாவற்றையும் செய்து முடிக்க வந்திருக்கான். அப்பா அம்மா ஒத்துக் கொள்வார்களே! அப்படித்தானே?''

''அப்படி இல்லே. அவன் நேர்மையைக் கடைப்பிடிக்கிறுன் என்று ஏன் நினைக்கக் கூடாது?'' என்று கேசவப் பிள்ளை கேட்டார்.

''நீங்க என்னதான் சொன்னுலும் நாங்க அதற்குத் தயாராக இல்லே. எங்க சம்மதத்தோடெ அந்தக் கல்யாணம் நடக்காது'' என்று சங்கரன் நாயர் முடிவாகச் சொன்னுர்.

அந்தத் தூதும் தோல்வி அடைந்தது. தாய் தந்தையரின் சம்மதத்துடன் அந்தத் திருமணம் நடைபெறப் போவதில்லை என்பது உறுதியாகி விட்டது. எப்படி இருப்பினும், அது நடக்கத்தான் வேண்டும் என்று கோபாலனும் முடிவு செய்தான்.

கௌரி தாயில்லாத பெண். தாய்வழி உறவினர் யாருமே இல்லை. தந்தை கல்வி அறிவு இல்லாதவர். அவருக்குத் தம்பி ஒருவர் இருக்கிறர்; கொச்சக் குஞ்சுப் பிள்ளை மிகவும் சாமர்த்தியக்காரர். கொச்சக் குஞ்சுப் பிள்ளைக்கும் சங்கரன் நாயருக்கும் பெரிய விரோதம். சங்கரன்

நாயருக்கு ஒரு பாடம் கற்பிக்கக் கொச்சுக் குஞ்சுப் பிள்ளைக்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. அவர் அந்த வாய்ப்பைச் சரியான படி பயன்படுத்தவும் செய்தார். எந்தவிதமான ஆடம்பரமும் இல்லாமல் ஊரிலுள்ள நான்கு பெரிய மனிதர்கள் முன்னால் திருமணச் சடங்கு நடத்தினால் போதும் என்பது கோபாலன் அபிப்பிராயம். தாயும் தந்தையும், தாய் மாமன்மார்களும், மற்றும் வேண்டியவர்களும் கோபித்துக் கொண்டாயிற்று. அவர்கள் எவருமே வராமல் இருக்கும்போது விருந்தும் மற்றும் வைப்பது சரியல்ல என்பது மட்டுமல்ல, பணமும் விரயமாகும். கௌரியின் தந்தை அதற்கு ஒப்புக் கொண்டார். ஆனால், கொச்சுக் குஞ்சுப் பிள்ளைக்கு அது பிடிக்கவில்லை. தன் அண்ணன் வீட்டில் நடைபெறும் கடைசியான நல்ல காரியம். ஆதலால் திருமணம் தடபுடலாக நடைபெற வேண்டும். கௌரியின் தந்தையிடத்தில் சிறிது பணம் இருந்தது. அவர் தம் கட்டாயத்துக்கு வழங்கினார். கௌரிக்கும் தன் திருமணம் பிரமாதமாக நடைபெற வேண்டும் என்று ஆசை. ஆதலால் கோபாலனும் ஒப்புக் கொண்டான்.

கிராமத்து ஜனங்கள் அனைவருக்கும் அழைப்பு இருந்தது. கொச்சுக் குஞ்சுப் பிள்ளை ஆலப்புழையிலிருந்து ஒரு கிராமபோன் கொண்டு வந்தார். அந்த நாட்டுப் புறத்து மக்களுக்கு அது ஒரு புதுமையாக இருந்தது. அவர் அந்தக் கிராமபோன் முகப்பைச் சங்கரன் நாயர் வீட்டை நோக்கித் திருப்பி வைத்தார். திருமணத்துக்கு முந்தின நாள் ஒரே பாட்டாக இருந்தது. ஒரு நண்பனிடம் கொச்சுக் குஞ்சுப்பிள்ளை 'அந்தச் சங்கரன் இன்றைக்குத் தூங்கக் கூடாது' என்று ஒருவிதமான மன நிம்மதியுடன் சொன்னார்.

பாட்டு மட்டுமல்ல, நாகசுரம்கூட இருந்தது. அன்று இரவு விருந்தும் இருந்தது. அன்று காலையிலேயே சங்கரன் நாயர் ஊரை விட்டு எங்கோ போனார். ஆனால் பார்வதி அம்மாளால் எங்காவது போக முடியுமா? அன்று நாள் முழுதும் அவள் அழுது கொண்டே இருந்தாள். பெற்றெடுத்த பிள்ளை அவரை அசட்டை செய்தான் என்பது மட்டுமல்ல, அவமதிக்கக்கூட வல்லவா செய்தான்? அந்தத் தடபுடலெல்லாம் அவரை அவமதிக்கத்தான் என்பது அவருக்குத் தெரியும்; அதற்கு அவர் பிள்ளை உடந்தை. தாய் தந்தை என்பதையெல்லாம் அவன் மறந்தே போனான்!

பார்வதி அம்மாள் தம் தலையில் கை வைத்துச் சபித்தாள்: ''என் பிள்ளைக்கு மருந்து வைக்க அவனை இப்படியாக்கினவங்க தலை வெடிச்சுப் போகட்டும்.''

அந்தத் திருமணத்தைப் பற்றி ஊரிலே ஒரே பேச்சாக இருந்தது. இரு தரப்பாரைக் குறித்தும் பேசுவதற்கு நிறைய இருந்தது.

திருமணம் நடந்தாகி விட்டது. ஆனால் கோபாலனுக்கு மன நிம்மதி இல்லை. அங்கு தொலைவில் அவன் தாய் தந்தையரைப் பார்க்கிறான். ஆனால் அவர்களிடம் செல்ல முடியவில்லை. இடையிலே எவ்வளவு தூரம்! நாட்கள் செல்லச் செல்லத் தூரம் அதிகமாகிறது. அவர்கள் இருவரும் ஒரு வேளை அழுது கொண்டிருப்பார்கள். என்றென்றைக்கும் இப்படி மாமனார் வீட்டில் இருந்தால் போதுமா? எப்படி நாட்களைத் தள்ளுவது? வேலைவெட்டி ஒன்றும் கிடையாது. ஓரணா வேண்டும் என்றால்கூடக் கௌரியிடம் கேட்க வேண்டும். ஒரு சிக்கலான பிரச்னைக்குக் கோபாலன் உள்ளானான்.

நான்கைந்து மாதங்கள் சென்றன. ஒரு நாள் கோபாலன் தன் வீட்டுக்குப் போனான். சங்கரன் நாயரும் பார்வதி அம்மாளும் முற்றத்தில் உட்கார்ந்து தென்னங்கீற்றைப் பின்னிக்கொண்டிருந்தனர். தன் திருமணத்துக்கு முன் வீட்டை விட்டு வெளியேறிய கோபாலன் முதல் தடவையாக வீட்டுக்குப் போகிறான். ஏதோ ஒரு முடிவுக்கு வந்த உறுதி அவன் முகத்தில் தெரிகிறது. உண்மையில் அவன் தன் சுயநினைவில் அங்கு செல்லவில்லை.

காலோசை கேட்டு, சங்கரன் நாயர் தலை நிமிர்ந்து பார்த்தார். உண்மையிலேயே கோபாலன் வெடவெடத்தே போனான். சேமித்து வைத்திருந்த துணிச்சலின் ஒரு பகுதி காற்றைப் போல் 'புஸ்' என்று போய் விட்டது. அவன் எதையோ பிடித்து நிற்கிறான். சங்கரன் நாயர் கோபத்துடன் குதித்

## கவசம்!



ஜவாஹர்லால் நேரு, பா, தேவதாஸ் ஆகியவர்களுடன் காந்திஜி வாரணாசிக்குச் சென்றார். பொதுக்கூட்டத்தில் அவர் உரையாற்ற முடியாதபடி குழப்பம் விளைவிக்க ஒரு சில சனாதனி இளைஞர்கள் திட்டமிட்டிருக்கும் செய்தி பாவுக்கு எட்டிற்று. உடனே பா, பொதுக்கூட்டத்துக்குச் செல்ல மோட்டார் காரில் புறப்பட்டார். அவருடன் ஜவாஹரும் தேவதாஸும் கிளம்பினார்கள். கூட்டம் நடக்கும் இடத்துக்கு அருகில் சென்றதும் அவர்களை அடையாளம் கண்டு கொண்ட சில இளைஞர்கள் காந்தி எதிர்ப்பு கோஷங்கள் செய்து காரை மறித்துக் கொண்டார்கள். காந்திஜியைத் தரிசிப்பதற்காக நெடுகிலும் மக்கள் நின்று கொண்டிருந்ததால் மோட்டார் காரைத் திருப்பிச் செலுத்திச் செல்ல முடியவில்லை. குழப்பம் செய்கிறவர்களை விலக்குவதற்காக ஜவாஹர்லால் வண்டியிலிருந்து இறங்கினார். இதற்குள் யாரோ ஒருவர், பொதுக்கூட்டத்தில் கல்வீச்சு நடப்பதாக உரத்த குரலில் கூறியதும், ''கல்லெறிதலும் குழப்பமும் நடக்கும்போது நான் இங்கு நிற்கிறேனே?'' என்று பா அங்கலாய்த்துக் கொண்டு வண்டியிலிருந்து குதித்துக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னேறினார். வெகு சீக்கிரம் பாபுவுக்கு அருகில் சென்று நின்றார். சிறிது நேரத்தில் குழப்பம் அடங்கி, பாபு பேசத் தொடங்கினார்.

— கே. எஸ். ஜே.






## உங்கள் குளியலறையின் சுகாதாரம் எப்படி?

சுத்தமில்லாத சுற்றுப்புறம்
கிருமிகளை வளர்க்கிறது...
உங்களது உடலைப் பாதிக்கிறது.
குளியலறையைத் தூய்மையாக
வைத்துக் கொள்ள சிறந்த
கிருமிநாசினி

## காவேரி பிராண்ட் ப்ளீச்சிங் பௌடர்

வைக்க அடக்கமான ½ கி.
பாலிதீன் பைகளில் இப்பொழுது
கிடைக்கிறது.

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை R.S. சேலம் மாவட்டம்

மேனேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.

Criterion-MC-1142

தெழுந்தார்: ''ஏண்டா இங்கே வந்தே?'' அது ஒரு கர்ஜனை போல் இருந்தது.

கோபாலன் உருப்போட்டு வைத்திருந்த அந்த வாக்கியத்தைச் சொன்னான். ''எனக்கு என்னுடைய பாகம் வேணும்.''

''உனக்குப் பாகமா வேணும்?'' என்று கூறிக் கொண்டே சங்கரன் நாயர் கையை ஓங்கி முன்னுக்குத் தாவினார். கோபாலன் ஓடி மறைந்தான்.

இருப்பினும் அந்த விஷயம் அத்துடன் முற்றுப் பெறவில்லை. ஊரிலுள்ள சில பெரிய மனிதர்கள் பாகப் பிரிவினையைப் பற்றிப் பேசுவதற்காகச் சங்கரன் நாயரிடத்தில் வந்தார்கள். எல்லோருக்கும் சங்கரன் நாயர் பதில் ஒரே விதமாகத்தான் இருந்தது. ''அவன் பாகத்தை வாங்குறபடி வாங்கிக்கட்டும்.''

இதற்கிடையில் கௌரியின் தந்தை காலமானார். கௌரிக்கு மாதம் நெருங்கிக்கொண்டிருந்தது. வீட்டுச் செலவுக்கே பணம் போதவில்லை. இரண்டு கறவை மாடுகள் இருந்தன. அதை வைத்துக் கொண்டுதான் அன்றாடச் செலவு நடக்கிறது. அந்த மாடுகளைப் பராமரிக்கப் பிள்ளைத்தாய்ச்சியாக இருப்பதால் கௌரிக்கு முடியவில்லை. பட்டினியின் விளிம்பு வரை கோபாலன் வந்து சேர்ந்தான். இப்போதைக்குக் கோபாலனுக்குக் கொச்சுக் குஞ்சுப் பிள்ளை மட்டும்தான் உறுதுணை.

கொச்சுக் குஞ்சுப் பிள்ளை கோபாலனுக்குப் புத்திமதி கூறினார்: ''நீ போயி தென்னை மரத்திலிருந்து தேங்காய் பறிச்சுக்கோ. உனக்கும் உரிமை இருக்கே.''

வீட்டுத் தோட்டத்தில் பகல் நேரத்தில் சென்று, தேங்காய் பறிக்கக் கோபாலனுக்குப் பயம். அதனால் இரவுக்கான திட்டம் தீட்டப்பட்டது. ஒரு நாள் தந்தை இல்லாத நேரம் பார்த்து அவன் தன் வீட்டிலிருந்து ஒரு வெண்கலப் பாத்திரத்தைக் கொண்டு வந்தான். தாயார் தடுத்ததையும் பொருட்படுத்தவில்லை. பிடிவாதக்காரரான சங்கரன் நாயர் போலீஸிலே புகார் செய்தார். கோபாலனைக் கைது செய்து கொண்டு போனார்கள். மாலையில் கொச்சுக் குஞ்சுப் பிள்ளை அவனை மீட்டுக் கொண்டு வந்தார்.

எல்லாமாக ஒரே குழப்பம். ஊரார் சிலர் சேர்ந்து சமாதானம் பண்ணி வைக்க முன் வந்தார்கள். கடைசியாகப் பாகப் பிரிவினைக்குச் சங்கரன் நாயர் சம்மதித்தார். வீட்டுத் தோட்டத்தின் தெற்குப் பக்கமாகப் பதினைந்து செண்டு நிலத்தைக் கொடுத்தார்;

இதற்கிடையில் கௌரி பிரசவித்தாள். பிரசவம் சிறிது கஷ்டமுடையதாக இருந்தது. மருத்துவ மனைக்குக் கொண்டுபோக வேண்டியதாயிற்று. பாகப் பிரிவினையில் கிடைத்தது பதினைந்து செண்டு நிலம். அதில் செடி போல் பத்து தென்னை மரங்கள். இதை வைத்துக் கொண்டு நாள் தள்ள முடியுமா? கடன் கொடுத்தவர்கள் வேறு கோபாலனை முற்றுகை போடுகிறார்கள்.

கொச்சுக் குஞ்சுப் பிள்ளையின் உதவியுடன் கோபாலன் அந்தத் தோட்டத்தை ஒரு கிறிஸ்தவருக்கு விற்றான். அதே விலைக்கு வேறு யாரோ வாங்கத் தயாராக இருந்தார்கள். ஆனால் ஒரு வைராக்கியத்துடன் கொச்சுக் குஞ்சுப் பிள்ளை அந்த இடத்தை ஒரு கிறிஸ்தவருக்கு விற்கச் செய்தார்.

அன்றும் ஒரு திருப்தியுடன் கொச்சுக் குஞ்சுப் பிள்ளை ஒரு புன்முறுவல் பூத்தார்.

கோபாலனுக்கு ரொக்கமாக ஆறு நூறு ரூபாய் கிடைத்தது. அதில் இருநூறு ரூபாய் கடன் அடைக்கச் செலவாயிற்று. மீதிப் பணத்தில் ஐம்பது ரூபாய்க்குக் கோபாலன் கௌரிக்கு ஒரு சேலையும் ரவிக்கைக்குத் துணியும் வாங்கினான். முதன் முதலில் கௌரிக்குச் சேலை வாங்குகிறான். திருமணத்துக்கு வாங்கிய சேலை அவன் தந்தை வாங்கிக் கொடுத்தது.

அன்று இரவு கணவனும் மனைவியும் தங்கள் வருங்காலத்தைப் பற்றி வெகு நேரம் ஆழ்ந்து யோசித்தார்கள். முந்நூற்றி ஐம்பது ரூபாய் கையில் இருக்கிறது. மொத்த முதல் அவ்வளவுதான். நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய் செலவழித்தால் ஓராண்டுக்குப் போதுமானது. அதற்குப் பிறகு? கௌரிக்கு ஒரு யோசனை தோன்றியது.

''சின்னதாக ஒரு வியாபாரம் ஆரம்பிக்கலாமா?''

அட்டைப்பட விளக்கம்

**'புத்தம்புது மலர்போல் பூத்திடுவோமே!'**

வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் அழகிய தோட்டங்களையும் நந்தவனங்களையும் கண்டு மகிழும் வேளையில் கவிமணியின் இதயத்திலே எத்தகைய ஆசை உருப்பெறுகிறது, பாருங்கள் !

பசுமையே இல்லாத வறண்ட மலைப் பிரதேசத்தில் பிரயாணம் செய்யும் வாய்ப்புக் கிட்டி அங்கே திடீர் என்று ஒரு கற்பாறையின் பிளவில் ஓர் அங்குல நீளத்துக்கு வளர்ந்துள்ள ஒரு சின்னஞ்சிறு செடியில் மலர்ந்துள்ள காட்டுப் பூவினைப் பார்க்க நேர்ந்தால் மகிழ்ச்சியுறும் நெஞ்சத்தின் நிலையை என்னவென்று வர்ணிப்பது ?

இங்கோ கற்பனைத் திறன் படைத்த கலைஞன், இருவேறு துருவங்களை ஒன்றாக்கி மகிழ்கிறான்! கள்ளிப் புதரிலே கருத்தைக் கவரும் கவின்மலர்களைப் பாங்குறச் சமைத்துப் படம் பிடித்துக் காட்டுகிறான்! அது மட்டுமா ? 'வாழ்க்கையும் இத்தகையதுதான்; இன்ப — துன்பங்கள் நிறைந்ததுதான். எதிலும் இன்பம் துய்ப்பதுதான் மனிதனின் பண்பாக அமைய வேண்டும்!' என்பதையும் கூறாமல் கூறி விளங்க வைக்கிறான்! **திரு ஆர். பி. எஸ். மணி** அவர்களின் வண்ணப் புகைப்படம் இப்பணியைச் செய்கிறது !

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது

## அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்


நிவாரணம்



அதி-வேகமாக நிவாரணம்

ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டைஅழற்சி • பல்வலி

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

**சாப்பிடும் அளவு:**

**வயது வந்தவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர்சொல்படி.






புதிய

**மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிக்கோலஸ் தயாரிப்பு

# தமிழர் தளபதி !



அறிஞர் அண்ணாவின் சொல் ஆற்றலையும், கனிவு நிரம்பிய நோக்கத்தையும் உறுதி வாய்ந்த உள்ளத் திண்மையையும் கண்ட, தமிழ்த் தென்றல் திரு வி. க. அவர்கள் தமது உரை ஒன்றில் குறிப்பிட்டு எழுதி இருக்கிறார் :

''தமிழகத்தில் திரு வி.க. நடை, திரு வி.க. தமிழ், திரு வி. க. பாணி, திரு வி.க. எழுத்து என்று இன்று நிலவி வருகிறது மாறி இனி, வருங்காலத்தில், அண்ணாதுரை நடை, அண்ணாதுரை தமிழ், அண்ணாதுரை பாணி, அண்ணாதுரை எழுத்து என்றுதான் வரப்போகிறது. வருங்காலத்தில் தமிழ் மொழி அழிந்து சிதைந்து விடுமோ, அதை யார் காப்பாற்றப் போகின்றார்கள் என்று நான் பயப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் இனி, நான் நிம்மதியாகவே சாவேன். காரணம் அண்ணாதுரை தமிழுக்குச் சேவை செய்வதை என்றால் மறக்கவே முடியாது. அண்ணாதுரை ஓர் அரசியல் வாதிமட்டுமல்ல, அவர் தாய் நாட்டையும் தாய் மொழியையும் காக்கும் தமிழர் தளபதி.''

கோபாலனுக்கு அது ஒரு நல்ல யோசனையாகப் பட்டது.

ஒரு நாள் பார்வதி அம்மாள் தம் தோட்டத்தில் உட்கார்ந்து புல் பறித்துக்கொண்டிருந்தாள். நிமிர்ந்து பார்த்தபோது, அந்த மரத்தின் கீழ் ஒரு சிறு பெண் ஓர் அழகான குழந்தையை ஏந்தி நிற்பதைக் கண்டாள். அந்தக் குழந்தை ஏது என்பதைப் பற்றி அவளுக்குத் துளிக்கூடச் சந்தேகம் இருக்கவில்லை. அந்தப் பெண் கௌரியின் பக்கத்து வீட்டில் வசிப்பவள். அந்தப் பெண்ணின் இடுப்பில் உட்கார்ந்து அந்தக் குழந்தை அமர்க்களப்படுத்துகிறது. பார்வதி அம்மாள் அந்தப் பெண்ணைக் கூப்பிட்டாள். ''அடியே! அந்தப் பாப்பாவை இங்கே கொண்டு வா.''

அவள் நடந்து வந்தாள். அவள் முதுகையும் மார்பையும் அடித்து நொறுக்குகின்ற அந்தக் குழந்தை பார்வதி அம்மாள் கை நீட்டுவதற்கு முன்னதாகவே, அவளை நோக்கித் தாவிற்று. பார்வதி அம்மாள் பிடித்திராவிட்டால் குழந்தை கீழே விழுந்திருக்கலாம். அவன் கூவினான். பாட்டியுடன் அப்படியே ஒன்றிவிட்டான். அவன் பாட்டியின் கன்னத்தைக் கடித்தான். தலைமயிரைப் பற்றி இழுத்தான். என்ன சூட்டிகை! அந்தப் பெண் கூப்பிட்டும் குழந்தை அவளிடம் போக மறுத்தது. அவள் பிடித்து இழுத்தபோது குழந்தை அழுது கத்தினான்.

அன்று இரவில் சங்கரன் நாயர் சாப்பாட்டை முடித்து உட்கார்ந்து இருக்கும்போது — அது ஒரு நல்ல நேரம் என்று தெரிந்தும் — சிறிது சங்கோசத்துடன் பார்வதி அம்மாள் சொன்னார்: ''இன்னைக்கு ஒரு சங்கதி நடந்தது.''

சங்கரன் நாயர் கேட்டார்: ''உம், என்ன அது?''

பார்வதி அம்மாள் சொன்னாள்: ''இரத்த பாசம், இரத்த பாசம் என்று சொல்கிறார்களே, அதைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''என்ன ஆச்சு?''

''அந்தக் குழந்தை இருக்கே, நான் புல் செதுக்கிக் கொண்டிருக்கும்போது, என்னைப் பார்த்து 'பாத்தி'ன்னு கூப்பிட்டு என்மேல் தாவிற்று. நான் கை நீட்டிப் பிடித்திருக்காவிட்டால் குழந்தை கீழே விழுந்திருக்கும். குழந்தைதானே என்று நினைச்சேன். அது என்னை விட்டுப் போக மாட்டேங்குது.''

சங்கரன் நாயர் சொன்னார்: ''இரண்டு நாள் முன்னால் நானும் பார்த்தேன். அது எங்கிட்டேயும் தாவிற்று. குழந்தை உன்னை அப்படியே உரிச்சு வைச்சிருக்கு.''

பார்வதி அம்மாள் அதை மறுத்தாள். ''இல்லே. அது அதன் தாத்தாவைப்போல் தான் இருக்கு.''

கோபாலனுடைய வியாபாரம் அவ்வளவாகச் சிறக்கவில்லை. முதலாவதாக அவனுக்கு வியாபாரம் செய்து பழக்கமில்லை. வீட்டுச் செலவும் அதை வைத்துக் கொண்டு நடத்த வேண்டியிருக்கு. கடையில் பொருள்கள் குறைந்து கொண்டே வந்தன.

ஒரு நாள் தங்களுடைய வேறு ஒரு தோட்டத்தில் சங்கரன் நாயரும், பார்வதி அம்மாளும் காய்கறி நட்டுக் கொண்டிருந்தார்கள். அன்றும் அந்தப் பெண் அந்தக் குழந்தையைத் தூக்கி வந்தாள். அன்று அவன் தன் தாத்தா கைகளுக்குத்தான் தாவினான். பாட்டி கூப்பிட்டும் போகவில்லை, சங்கரன் நாயர்

குழந்தை முகத்தைப் பார்வதி அம்மாளின் முகத்துடன் சேர்த்து வைத்துச் சொன்னார்: ''கொஞ்சம்கூட வித்தியாசமில்லை, பாரேன்!''

பார்வதி அம்மாள் எதிர்ப்புத் தெரிவித்தாள். இருப்பினும் அதில் ஒரு தனி மகிழ்ச்சி.

குழந்தையைக் கொண்டு போகும்போது கௌரியிடம் தெரிவிக்க, அந்தப் பெண்ணிடம் அறிவுரை ஒன்றைப் பார்வதி அம்மாள் சொன்னாள். ''குழந்தை நல்லா இருக்கான். அவனுக்குக் கண் படாமல் பார்த்துக்கணும். தினமும் சுத்திப் போடச் சொல்லு.''

ஒரு நாள் மாலை மயங்கும் நேரம். அந்தக் குழந்தை விடாமல் அழும் சத்தம் கேட்டது. சங்கரன் நாயரும் பார்வதி அம்மாளும் வீட்டுக்கு மேற்குப் பக்கம் நின்று கொண்டிருந்தார்கள். ஏன் குழந்தை வாய் ஓயாமல் அழுகிறது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. பார்வதி அம்மாள் சிறிது கலவரத்துடன் சொன்னாள். ''குழந்தை விடாமல் அழுகிறது. பக்கத்து வீட்டுப் பெண் அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு நிற்கிறது. குழந்தையின் அம்மா இல்லையா அங்கே?''

''இல்லைபோல் இருக்கு. ஏன் இப்படி அழுகிறது? உடம்பு சரி இல்லையா என்ன?''

பார்வதி அம்மாள் ஒரு காரியத்துக்கு அனுமதி கேட்டாள்: ''நான் போகட்டா அங்கே? அந்தக் குழந்தை அழுகை...''

அதற்குப் பதில் திடீரென்று வந்தது.

''வேண்டாம்.''

''அவன் அங்கே இல்லையா?''

''இல்லை. சந்தைக்குப் போயிருக்கான்.''

அன்று இரவு முழுதும் அங்கே விளக்கு எரிவதைப் பார்த்தார்கள். குழந்தை அடிக்கடி வீறிட்டு அழும் சத்தம் கேட்டது.

கௌரி நினைவிழந்து கிடக்கிறாள் என்று மறுநாள் தெரிய வந்தது. கடுமையான ஜுரம். டாக்டர் மூன்று நான்கு தடவை வந்து பார்த்தார். ஜுரம் தணியவே இல்லை. மறுநாள் சங்கரன் நாயரும் பார்வதி அம்மாளும் குழந்தையை வரவழைத்தார்கள். அவர்கள் இருவரும் அங்கு போகவில்லை. பக்கத்து வீட்டுப் பெண்தான் குழந்தையைக் கொண்டு வந்தாள்.

ஐந்தாவது நாள் இரவில் கௌரி கண் திறந்தாள். கோபாலன் மனம் குளிர்ந்தது.

அவன் கேட்டான். ''என் குழந்தை எங்கே?''

''அவன் என் அப்பா அம்மாவோட இருக்கான்.''

கௌரியின் முகம் பிரகாசம் அடைந்தது. பிறகு அந்தக் கண்கள் மூடின. மீண்டும் அவை திறக்கவே யில்லை.

சங்கரன் நாயரும் பார்வதி அம்மாளும் முற்றத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். தாத்தா நாலு காலில் நிற்க வேண்டும். என்று அந்தக் குழந்தை அடம் செய்கிறான்; அவனுக்கு யானை மீது சவாரி செய்ய வேண்டுமாம்! சங்கரன் நாலு காலில் நின்றார். அவன் அவர் முதுகில் ஏறி உட்கார்ந்தான். நடக்கச் சொல்லி யானையின் தலையைப் பிடித்துக் குலுக்கினான்.

அப்பொழுது கோபாலன் அங்கே வந்தான். அவன் குழந்தையைக் கடிந்தான். ''டேய், என்னடா செய்யறே?''

பார்வதி அம்மாள் சொன்னாள்: ''முப்பது வருஷங்களுக்கு முன்னால் உங்கப்பா யானை யானதுடா, உனக்கு யானையான பிறகு இன்னைக்குத்தான் ஆகியிருக்கார்!''

## படித்துப் பாருங்கள்!

### ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்

நமது சநாதன தர்மம் குறித்தும், வேத இதிஹாச புராணச் செல்வங்கள் பற்றியும், ஸ்ரீ ஆதிசங்கரரின் அருமை பெருமைகள் குறித்தும், ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் கருணைச் செயல்கள் பற்றியும் தெள்ளிய தமிழில் அறிஞர்களின் சுவைமிக்க கட்டுரைகளை வழங்கி வரும் ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் இந்த மாசி மாதத்தில் பத்தாம் பிராயத்தைத் தொடங்குகிறது. ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யரைப் பிரதான ஆசிரியராகக் கொண்டுள்ள இந்த மாதாந்திர சஞ்சிகையின் ஆலோசனைக் குழுவில் ஸ்ரீமான்கள் நா. ரகுநாத அய்யர், ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மா, கே. சந்திரசேகரன், கி. வா. ஜகந்நாதன், டாக்டர் வெ. ராகவன் முதலியோர் இருப்பதே பத்திரிகையின் சிறப்புக்குச் சான்றாகும். ஆஸ்திகர்கள் அவசியம் ஆதரிக்க வேண்டிய அரும் சஞ்சிகை.

வருட சந்தா: ரூ. 6; முகவரி: காமகோடி ப்ரதிபம், 4, பிரான்சிஸ் ஜோசப் தெரு, சென்னை - 1.

## வட்ட மேஜை

கல்கியில் வெளியான 'அன்பிற்கு இடம் வேண்டும்' என்ற கதையைப் பற்றி இரு சந்தேகங்கள் : 1. கதையில் திருமணம் செய்து கொள்வதாக இருக்கும் பையன், படத்தில் பூணூலை ஏன் மாற்றிப் போட்டுக் கொண்டிருக்கிறார்? 2. ரூ. 6,500ஐ தபால் இலாகாவினர் இன்ஷூர் கவரில் அனுப்பச் சம்மதிக்கிறார்களா ?

மதுரை -
4 - 2 - 69 வை. கிருஷ்ணமூர்த்தி

சிறுவர் விருந்து பகுதியில் சுதாகரன் பம்பர வித்தையில் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்ல மறந்து விட்டார். 'ட்யூப் லைட்' வேகமாக அணைந்து எரியும் சக்தியுள்ளது. வினாடிக்கு 10 முறைக்குமேல் அணைந்து எரிவதனால் பம்பரத்தின்மேல் ஒட்டிய காகிதம் மாறி மாறிச் சுழலுவது போல் ஒரு பிரமை உண்டாகிறது. சினிமாவில் ஒரு வண்டி ஓடும் போது அதன் சக்கரம் திசை மாறிச் சுழலுவதைக் கவனித்திருக்கலாம். காரணம் சினிமா புரொஜக்டரில் 'ஷட்டர்' மூடி மூடித் திறப்பதனால்தான்!

சென்னை - 7-2-69 ராமமூர்த்தி

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# பூங்கா நகரம்—
# 60 ஆண்டுகள் முன்பே திட்டமிட்டு உருவானது

ஜாம்ஷெட்பூர்: வண்ணமலர்சோலைகள் மிகுந்தது, எஃகு நகரமென அழைக்கப்படும் ஜாம்ஷெட்பூர். அது உண்மை! இந்தியாவின் எழில் மிகு நகரங்களில் அதுவும் ஒன்று. மேநாட்டில் திட்டமிட்ட நகர்நிர்மாணங்கள் சர்வசாதாரணம். ஆயினும், அதனினும் அறுபது ஆண்டுகளுக்கு முன்பே ஜாம்ஷெட்பூர் திட்டமிட்டு உருவானதென்பது வியப்பேயாகும்.





சோனுரி— திருத்தியமைக்கப்பட்ட குடியிருப்பு பழங்கட்டடங்களில் திட்டமிட்டு, 20 குடிசைகளை, நல்ல வெளிச்சமுள்ள சாலைகள், போதுமான தண்ணீர் வசதிகளுடன் சிறந்த குடியிருப்புகளாக மாற்றியமைக்க டாடா ஸ்டீல் உதவி செய்துள்ளது.



டாடா பெரிய மருத்துவ மனை: வசதிகளுடன் 600 படுக்கைகள் பெற்றது இந்த மருத்துவமனை. தனி 82 படுக்கைகளுடன் ஒரு காசநோய் மருத்துவ மனையும் அதில் ஒரு குழந்தைகள் வார்டும் அமைக்க டாடா ஸ்டீல் உதவியுள்ளது.



ஜூபிலி பூங்கா: "மனிதர்களுக்கும், அவர்தம் உணர்ச்சிகளுக்குமான அடிப்படைத்தேவைகளை, எஃகு மற்றும் இரும்பைக்காட்டிலும், மலர்களும் பூங்காக்களும், மரங்களும் பூர்த்தி செய்கின்றன என்று நான் கருதுகிறேன். அந்த சிறந்த சிந்தனையின் தோற்றமே இப்பூங்கா."

—ஜவாஹர்லால் நேரு

**எஃகும், மக்களுமே எங்கள் பலம்**

**டாடா ஸ்டீல்**

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon